# GRACE







**Rs. 4.15**
(inclusive of all taxes)
Net weight: 100 gms

காலைக் காற்றின் புதுமை.
பனித்துளிகளின் குளுமை.

# கிரேஸ்

குளியல் சோப்

MSIL Marketed by
Mysore Sales International Limited, Bangalore 560 052

# ஜோஷியும் ஜோஸ்யமும் ஜோஷி!



அத்வானியின் ரதயாத்திரை, பேராதரவை மட்டுமின்றி எதிர்ப்பையும் கணிசமாகத் தோற்றுவித்துள்ளது. புதிதாக பி.ஜே.பி. தலைவர் பதவிக்கு வந்துள்ள முரளி மனோகர் ஜோஷி, அந்தப் பேராதரவை இருத்திக் கொண்டு, அதே சமயத்தில் எதிர்ப்பையும் சமாளித்து, அதனையும் ஆதரவாக மாற்ற வேண்டிய நிலையில் இருக்கிறார். தேர்தல் ஆண்டாகக் கருதப்படும் இந்த ஆண்டில், பி. ஜே. பி. யின் வெற்றி அல்லது தோல்வி, இவ்விஷயத்தில் ஜோஷி வெளிப்படுத்தும் சாணக்யத்தின் அடிப்படையிலேயே இருக்கும்.

இத்தகைய ஓர் அணுகுமுறைக்கு அவர் ஏற்றவர்தான் என்பதை அவரது வேறு சில காரியங்கள் உணர்த்தும். உதாரணமாக, விஞ்ஞான ரீதியாக ஆய்வு நடத்தி டாக்டர் பட்டம் பெற்ற இவர், தமது ஆய்வினை எழுதிச் சமர்ப்பித்தது ஹிந்தி மொழியில். முதன் முதலாக ஹிந்தி மொழியில் ஒரு விஞ்ஞான ஆய்வுக் கட்டுரையைச் சமர்ப்பித்தவர் ஜோஷிதான். என்றாலும் ஜோஷி ஒரு ஹிந்தி வெறியர் அல்லர்.

பி. ஜே. பி. தலைவராக ஏகமனதாகத் தேர்ந்தெடுக்கப்பட்ட ஜோஷிக்கு ஆர். எஸ். எஸ். அஸ்திவாரம் உண்டு. அலகாபாத் பல்கலைக் கழகத்தில் பௌதிகப் பேராசிரியரான இவர், எப்போதும் வேஷ்டி, குர்த்தா, அங்கவஸ்திரம்தான் அணிவார். நெற்றியில் எப்போதும் குங்குமம் பளிச்சிடும். ஐம்பத்தாறு வயதான இவரது பூர்வீக ஊர், உத்தரப் பிரதேசம், குமான் மலைகளிடையே அல்மோரா. எனினும் இவர் பிறந்தது டில்லியில்.

அலகாபாத் பல்கலைக் கழகத்தில் இவருடைய நேரடி மாணவர் வி. பி. சிங்! அதே காலகட்டத்தில், சந்திரசேகரும் அங்கு படித்துக் கொண்டிருந்தவர்தான்! நூற்றுக்கும் மேற்பட்ட ஆராய்ச்சிக் கட்டுரைகள் எழுதியுள்ள ஜோஷி, இன்றும் ஒரு புத்தகம் எழுதிக் கொண்டுதான் இருக்கிறார்.

எமர்ஜென்சியின் போது பத்தொன்பது மாதம் சிறைவாசம் அனுபவித்த இவர், ஒரு ஜோசியரும் கூட. "இந்திரா காந்தி குடும்பத்தில் ஒரு பேராபத்து வர இருக்கிறது" என்று இவர், நாடாளுமன்றத்தின் மையக் கூடத்தில் நண்பர்களுடன் அளவளாவும் போது கூறினார். அடுத்த சில தினங்களுக்குள் சஞ்சய்க்கு விபத்து! பி.ஜே.பி. யின் எதிர்காலம் பற்றி இவரது ஜோசியம் என்ன கூறுகிறதோ!

— கௌசல்யா.

படம் — நன்றி: வீக்லி.



* கார்த்திகேயன்: "'ஐயோ, பாவம்' மாறி, 'அடடா, அபாரம்' ஆகும்!"

# ஐ.ஏ.எஸ். பணியில் தமிழகம்: 'ஐயோ, பாவம்!'

ஐ. ஏ. எஸ். தேர்வுகளில் வெற்றி பெற்ற தமிழர்களின் சதவீதம் மிக அதிகமாக இருந்ததால் தமிழ்நாட்டைப் பார்த்துப் பிறர் பொறாமைப்பட்ட காலம் ஒன்று இருந்தது. ஐம்பதுகளிலும் அறுபதுகளிலும் அவ்வாறிருந்த நிலை மாறி, இன்று தமிழகத்தின் பங்கு அதள பாதாளத்துக்குச் சரிந்து விட்டது.

'ஏன்?' என்பதை ஆராய ஓய்வு பெற்ற ஐ. ஏ. எஸ். அதிகாரி வி. கார்த்திகேயன் தலைமையில் ஒரு குழு அமைக்கப்பட்டது. இந்தக் குழு தனது பணியை முடித்து அறிக்கையையும் சமர்ப்பித்து விட்டது. அதில் என்ன சொல்லியிருக்கிறார்கள்? கார்த்திகேயனைக் கேட்டோம்:

கேள்வி: ஏற்கெனவே ஒரு முறை இது போன்ற கமிட்டி அமைக்கப்பட்டது போலிருக்கிறதே?

பதில்: ஆமாம். எஸ். குருமூர்த்தி, ஐ.ஏ.எஸ். தலைமையில் 1976 இல் ஒரு கமிட்டி அமைந்து அது தன் அறிக்கையைச் சமர்ப்பித்துள்ளது. அதன் மீது நடவடிக்கை எடுக்கப்பட்டதாகத் தெரியவில்லை. இப்போது நாங்களும் எங்கள் பணியை முடித்து '89 ஜனவரியில் அறிக்கை சமர்ப்பித்து விட்டோம். அரசு உரிய நடவடிக்கை எடுக்கும் என்று எதிர்பார்க்கிறோம்.

கேள்வி: உங்கள் நோக்கில் இந்தப் பிரச்னைக்கு அடிப்படையான காரணம் என்ன?

பதில்: அடிப்படை என்று பார்க்கப் போனால் அது நமது மனோபாவம்தான். அதாவது கல்வியை ஒரு முதலீடாகக் கருதுகிற மனோபாவம் நம்மிடம் வளரவில்லை. தொழில் துறையில் முதலீடு செய்யும் போது லாபம், நஷ்டம் என்று ஒவ்வோர் ஆண்டும் கணக்குப் போடலாம். கல்வித் துறையில் செய்யும் முதலீட்டுக்கு அப்படிக் கணக்குப் போட முடியாது. கல்வி என்பதே ஒரு முதலீடு, மூலதனம் என்று கருத வேண்டும். அந்த மூலதனம் பெருக பணத்தை முதலீடு செய்ய வேண்டும். சில காலம் திட்டமிட்டு இப்படி முதலீடு செய்தால் கல்வி என்ற மூலதனம் பின்னர் அற்புதமான லாபங்களை வாரி வழங்கும். அதனை, மாநிலத்தின் — நாட்டின் துரித வளர்ச்சி என்ற முறையில் கண்கூடாகக் காணலாம்; அளவிடவும் செய்யலாம்...

கேள்வி: கல்விக்காகப் பணத்தை ஒதுக்கீடு செய்தால் போதுமா? அதனைச் சரியான முறையில் பயன்படுத்த வேண்டுமல்லவா?

பதில்: நிச்சயமாக. பணம் மட்டும் போதாது. கல்வியை அபிவிருத்தி செய்யச் சரியான திட்டமிடல் வேண்டும். முதலாவதாகப் பாடத் திட்டத்திலேயே பல குறைபாடுகள் உள்ளன. அதைச் சரிப்படுத்துவதோடு கடமை உணர்வுடன் கூடிய சிறந்த ஆசிரியர்களை உருவாக்குவதிலும் கவனம் செலுத்த வேண்டும். மாணவர்களின் ஆங்கிலத் தரம் மிகவும் குறைந்து போய் விட்டது. 'ஆங்கில மீடியமில் படிக்கிறேன், பரீட்சை எழுதுகிறேன்' என்று முன்வருகிறார்களேயொழிய தவறின்றி எழுத

முடிவதில்லை. பேசி உரையாடவும் தெரிவதில்லை. இந்தத் தடுமாற்றத்தை நீக்க ஆங்கில மொழி அறிவை நன்றாகப் போதிக்க வேண்டும். இல்லையென்றால் பரீட்சை நன்றாக எழுதுவோர் கூட நேர்முகத் தேர்வில் தோல்வி அடைகிற இன்றைய நிலை தொடரும். மாணவர்கள் ஆங்கிலத்தில் பேசிப் பழகக் கலந்துரையாடல் வகுப்புகள் நடக்க வேண்டும்...

கேள்வி: வடமாநிலங்களில் நம்மை விட ஆங்கிலம் மோசமாகப் பேசுவோர் இருக்கிறார்களே?

பதில்: இருக்கலாம். ஆங்கிலத்தின் தரம் அனைத்து இந்திய அளவில் குறைந்துதான் போயிருக்கிறது. ஆனால் நாம் பின்தங்குவதற்கு அதைக் காரணம் காட்டக் கூடாது.

கேள்வி: அரசு உத்தியோகம் அல்லாத இதர பிற துறைகளுக்கு மாணவமணிகள் அதிகமாக ஈர்க்கப்படுகிறார்கள். நிறையச் சம்பளம்...

பதில்: ஐ. ஏ. எஸ்., ஐ. பி. எஸ். துறைகளுக்கு மவுசு குறைந்து விட்டதும் புத்திசாலிகள் இத்துறைகளுக்கு வராமலிருப்பதற்கு ஒரு காரணம்தான். இதுவும் அனைத்து இந்திய ரீதியில் பொருந்தும். இந்தத் துறைகளில் சேர்வதால் உள்ள ஆதாயங்கள் மாணவர்களுக்கு விளக்கப்படுவது மட்டுமின்றி, 'தேசப் பணி' என்ற கருத்தும் ஊட்டப்பட வேண்டும். அரசியல்வாதிகள் முன் கைகட்டிச் சேவகம் செய்வது போன்ற உணர்வு அவர்களுக்கு ஏற்படாமல் பார்த்துக் கொள்ள வேண்டும். இது ரொம்ப முக்கியம்.

கேள்வி: ஐ. ஏ. எஸ்., ஐ. பி. எஸ். போன்ற துறைகளுக்குப் படித்து வெற்றி பெறுவதில் பொது அறிவு முக்கிய பங்கு வகிக்கிறதல்லவா?

பதில்: நிச்சயமாக. இதற்கு உதவும்படியாக நூலகங்கள் அபிவிருத்தி செய்யப்பட வேண்டும். பள்ளி, கல்லூரி நூலகங்கள் மட்டுமின்றி, பொது நூலகங்களும் மேம்பாடடைய வேண்டும். நல்ல நூல்கள் தவிர, தரமான சஞ்சிகைகளும் எல்லா நூலகங்களிலும் கிடைக்க வேண்டும். இதோடு பள்ளி, கல்லூரிகளில் அடிக்கடி குவிஸ் நடத்தி, அதில் மாணவர்கள் ஆர்வத்துடன் கலந்து கொள்ளவும் பார்வையாளர்களாக விளங்கவும் ஊக்குவித்தால் பொது அறிவு வளரும்.

கேள்வி: ஐ.ஏ.எஸ்., ஐ.பி.எஸ். போன்ற துறைகளில் தமிழகத்தின் பங்கு குறைவாக இருப்பதால் என்ன குடி முழுகிப் போய் விடும்? எதற்காகக் கவலைப்பட வேண்டும்? வேறு துறைகளில் பிரகாசித்தால் போதாதா?

பதில்: உயர் மட்டத்தில் உள்ள ஐ.ஏ.எஸ். அதிகாரிகள், இட்டபட்ட கட்டளைகளை நிறைவேற்றுகிறவர்கள் மட்டுமல்ல. கொள்கைகளை உருவாக்குதல்; திட்டமிடுதல் போன்ற அம்சங்களிலெல்லாம் அவர்களின் பங்கு மகத்தானது. எனவே, எப்படி நாடாளுமன்றத்திலும், மத்திய அமைச்சரவையிலும் தமிழகத்துக்குப் போதிய பிரதிநிதித்துவம் இருக்க வேண்டும் என்று கருதுகிறோமோ, அப்படியே, ஐ. ஏ. எஸ். அதிகாரிகள் விஷயத்திலும் தமிழகத்துக்குப் போதிய அளவு பிரதிநிதித்துவம் இருக்க வேண்டும். இதில் நாம் அலட்சியமாக இருப்பது நமக்குத்தான் நஷ்டம்.

கேள்வி: கல்வித்துறையில் முன்னேற்றமே இல்லை என்று கூற முடியுமா?

பதில்: நிறைய முன்னேற்றம் உள்ளது. பள்ளிகள், கல்லூரிகள், மாணவர்கள், ஆசிரியர்களின் எண்ணிக்கை அதிகரித்த வேகத்தில் கல்வித் தரம் உயரவில்லை. குறைந்தே உள்ளது. கைடு புத்தகங்களில் உள்ள நோட்ஸைக் கூடம் அடித்துப் பரீட்சை எழுதிப் பாஸ் பண்ணுகிறார்கள். இது தரமான கல்வி ஆகாது.

கேள்வி: இட ஒதுக்கீட்டுக் கொள்கை இந்தப் பிரச்னையில் எந்த அளவுக்குப் பாதிப்பை ஏற்படுத்தி உள்ளது?

பதில்: பாதிப்பே இல்லை என்று கூற முடியாது. அதே சமயம் இடஒதுக்கீட்டுக் கொள்கை என்பது இன்றைய அரசால் ஏற்கப்பட்டு விட்ட ஒன்று என்பதை மறவாமல் அதற்கேற்பத்தான் நாம் திட்டமிடல் வேண்டும். உதாரணமாக, பட்டப்படிப்பு வரை எப்படியிருந்தாலும், பட்ட மேற்படிப்பு என்று வரும்போது, முற்படுத்தப்பட்டவர்களுக்கு எத்தனை மார்க்குகள் வாங்கினால் அட்மிஷன் கிடைக்கிறதோ அதற்கு 4 — 5 மார்க்குகள் குறைவாக வாங்கியிருந்தால் மட்டுமே பிற்படுத்தப்பட்டோருக்குச் சலுகை வழங்க வேண்டும். அதற்கு மேலும் சலுகை காட்டலாகாது. தவிர, பட்ட மேற்படிப்புக்கு நியமிக்கப்படும் ஆசிரியர்கள் விஷயத்தில் இட ஒதுக்கீடு என்ற பெயரில் எந்தவிதச் சலுகையுமே கூடாது. மேலும் பட்ட மேற்படிப்பின் போது வகுப்பாசிரியர்கள் மட்டுமே போதாது. அவ்வப்போது பிரசித்தி பெற்ற பேராசிரியர்களை அழைத்துச் சிறப்புச் சொற்பொழிவு நிகழ்த்தக் கோர வேண்டும்.

கேள்வி: ஆகமொத்தம், இன்று ஐ.ஏ.எஸ். பணியில் தமிழகத்தின் பங்கு 'ஐயோ பாவம்' என்ற நிலையில்தான் இருக்கிறது...

பதில்: அதை 'அடடா அபாரம்!' என்ற நிலைக்கு மாற்றத்தானே வழி சொல்லியிருக்கிறோம்!

— ப்ரியன்




யோசனை தெரிவித்த வாசகர்:
எம். செல்வராசு,
வேலூர் (சேலம்).

# ஃபேஷன் –

**ஃபேஷன் என்பது பெண்களின் விஷயத்தில்தான் என்பதில்லை. ஆண்கள் அணியும் ஆடைகளிலும் அது பிரதிபலிக்கிறது...**



* ரஃபீக்

டெலிவிஷனில், ஒலியும் – ஒளியும். கமல்ஹாசன், (கமலஹாசனாய் இருந்த போது) பெரிசாய்ப் பெல்பாட்டம், பட்டை பெல்ட், ஹை ஹீல்ஸ் ஷூ சகிதம் ஹீரோயினுடன் ஓடிப் பிடித்து விளையாடுவதைப் பார்த்த கல்லூரி மாணவி சங்கீதா, ''சே! ஒரு டிரஸ் சென்ஸே இல்லையே கமலுக்கு அப்போதெல்லாம்! எப்படித்தான் இந்த மாதிரி டிரஸ்ஸைப் போட்டுக் கொண்டு டூயட் பாடுகிறாரோ?'' என்றார் கிண்டலாய்த் தனது தம்பி ராஜேஷிடம்!

அந்தக் குறிப்பிட்ட சினிமா வெளிவந்த போது, ஃபேஷன், அதுபோன்ற பெல்பாட்டம்தான். சொல்லப் போனால், அந்த சீசனில் இளைஞர்கள் தங்களுடைய சாதாரண பாண்ட்களைக் கூட, கீழ்ப் பகுதிகளில் அதிகப்படியாய்த் துணி கொடுத்து, அகலப்படுத்தி, பெல்பாட்டமாய் அணிந்தார்கள். ''நானே முப்பத்தாறு அங்குலம் வைத்து பெல்பாட்டம் தைத்துக் கொடுத்திருக்கிறேன்'' என்கிறார் மைலாப்பூரில் தையல் கடை வைத்திருக்கும் ராஜ்குமார்.

ஃபேஷன் என்பது மாறிக் கொண்டே இருக்கும். ''அதுவும் அமெரிக்காவில் இரவோடு இரவாகப் பழையன கழிந்து, புதிய ஃபேஷன் புகுந்துவிடும். புது ஃபேஷன் வந்து விட்டால், பழைய ஃபேஷன் சமாசாரங்கள் அனைத்தையுமே அரை விலை, கால் விலைக்கு விற்பார்கள். அங்கே புதிய ஃபேஷன் அறிமுகப்படுத்தப்படுவது டெலிவிஷன் மூலமாகத்தான். டி. வி. ஸ்டார் யாராவது ஒரு புதிய ஃபேஷன் உடையில், தொப்பியில், காலணியில், தோன்றினால், உடனே அந்த ஃபேஷன் ஜுரம் வெகு வேகமாய்ப் பரவும். அமெரிக்காவில் ஜீன்ஸ் பாண்ட்களை, பாறைகள் மீது பரப்பி வைத்துத் துப்பாக்கியால் சுடுகிறார்கள். குண்டுகள் ஜீன்ஸ்களில், ஓட்டை விழச் செய்கின்றன. அந்த ஓட்டைகள் கொண்ட ஜீன்ஸ்களை அணிவது அங்கே ஃபேஷன்!'' என்கிறார் சுமார் ஒரு வருட காலம் அமெரிக்காவில் தங்கியிருந்து விட்டுச் சில மாதங்கள் முன்பு சென்னை திரும்பிய சாந்தி.

* நாஸர்



''ஆனால் நம் நாட்டில் அந்த அளவுக்கு வேகமாய் ஃபேஷன் மாறுவதில்லை. புதிய ஃபேஷன் அறிமுகமான பின்னரும் கூட, 'ஓல்டு சுஸ் கோல்டு' பேர்வழிகள் இருக்கவே செய்கிறார்கள்'' என்கிறார் ரேமண்ட் ஷோரூமின் நிர்வாகியான ரஃபீக்.

ஃபேஷன் என்பது எங்கே உருவாகிறது என்பதை அறிவது நதி மூலம் ரிஷி மூலம் கண்டுபிடிக்கிற கதைதான். ''ஒருநாள் மஞ்சள் கலரில் பாண்ட் துணியும், சிவப்பு கலரில் சட்டைத் துணியும் எடுத்துக் கொண்டு வந்த ஓர் இளைஞர், அவருக்குத் தெரிந்த விதத்தில் ஒரு மாடலைச் சொல்லி, அதுபோல் பேண்ட் சட்டை தைக்கச் சொன்னார். எனக்கு ஒன்றும் புரியவில்லை. கடைசியில் அவர், 'அதாங்க! ராஜா சின்ன ரோஜாவில் ரஜினி போட்டுக் கொண்டு வருவாரே! அதே போலத் தைத்துக் கொடுங்க!' என்றார். நான் அதன்பின் அந்தப் படத்தைப் பார்த்துவிட்டு வந்து, ரஜினி ஸ்டைலில்

# ஆண்களுக்கும் ஆசைதான்!

அந்தக் கஸ்டமருக்கு பாண்ட், ஷர்ட் தைத்துக் கொடுத்தேன். ஆக, சினிமா ஹீரோக்கள் தான் சமூகத்தில் ஃபேஷன்களுக்கு வித்திடுகிறார்கள்'' என்றார் தி. நகரில் தையல் கடை நடத்தும் நாஸர்.

இதுபற்றிச் சினிமாக்காரர்கள் என்ன சொல்கிறார்கள்? நடிகர் ஜனகராஜ், ''ரெடிமேட் கடைகளில் போனால் 'ஏ' கிளாஸ் ஃபேஷன்களில் உடைகள் இருக்கின்றன. அதுவும் பம்பாய் போய்விட்டால், ஃபேஷனின் சொர்க்கம்தான்! 'சினிமாவுக்கு ஓ.கே.; ஆனால் தினப்படிக்கு வெளியில் போட்டுக் கொண்டு போக முடியுமா?' என்று நினைக்கும்படி சில உடைகளின் ஃபேஷன் இருக்கும்!'' என்று கூறினார்.

ஆண்களுக்கான பிரத்தியேக ரேமண்ட் ஷோரூம் சென்று விசாரித்த போது, ''இந்தியாவைப் பொறுத்தவரை, உடைகளில் ஃபேஷனை அறிமுகப்படுத்தும் பணியில், உடைகளை ஏற்றுமதி செய்யும் நிறுவனங்களின் பங்கு முக்கியமானது. மேற்கத்திய நாடுகளின் தேவைகளுக்கேற்ப, உடைகளைத் தயாரித்து ஏற்றுமதி செய்வதோடு நின்றுவிடாமல், அந்த ஃபேஷன்களை இந்தியாவிலும் அறிமுகப்படுத்துகிறவர்கள் இவர்கள்தான். பம்பாயிலிருந்துதான் மற்ற நகரங்களுக்குப் புதிய ஃபேஷன் அறிமுகமாகிறது என்பது உண்மைதான் என்றாலும், பல்வேறு நாட்டினரின் நடமாட்டம் அதிகம் இருக்கிற காரணத்தால் டெல்லியிலும் புதுப் புது ஃபேஷன்களுக்கு நல்ல வரவேற்பு உண்டு'' என்றார் ரஃபீக்.

**மா**றிக் கொண்டே வரும் ஃபேஷன் சாம்ராஜ்யத்தில் பெல்பாட்டம் ஆட்சிக்குப் பின் டைட்ஸ், ஜீன்ஸ், சஃபாரி, 'டீ'சர்ட் என்று வந்தன. அவையும் போய், இன்று 'பேகி' **(Boggy)** மாடல் ஆட்சி நடத்துகிறது. இந்த பேகி நளினம், சௌகரியம் இரண்டையும் கொண்டது என்பது விசேஷம். இது இடுப்புப் பகுதியில் சரியான அளவும், தொடைப் பகுதியில் தொளதொளவென்றும், முழங்கால் பகுதியில் லேசாய்க் குறுகியும் தைக்கப்படுகிறது. இதிலும் நவீனமானது பலூன் பேகி, இடுப்பிலும், கால்களின் முடிவிலும் சரியான அளவிலும் இடைப்பட்ட பகுதி மிகத் தாராளமாயும் தைக்கப்படுகிறது.

''**வே**டிக்கை என்னவெனில், சில ஸ்டைல்களில் தைக்கப்படும் உடைகள் சிலருக்குப் பொருத்தமாகவே இருக்காது. இது புரியாத கஸ்டமர்கள் துணியைக் கொடுத்துத் தைக்கச் சொல்லும் போது, 'இந்த ஸ்டைல் உங்களுக்குப் பொருந்தாது' என்றாலும் கேட்க மாட்டார்கள். 'எனக்கு இந்த மாடலில்தான் தைக்க வேண்டும்!' என்று பிடிவாதமாகச் சொல்லுவார்கள்'' என்கிறார் டெய்லர் நாஸர்.

''ஷர்ட் பாக்கெட்டுகளில் புதுமை டிசைன்களுக்கு ஸ்கோப் உண்டு. சட்டையின் முன்புறத்தில் வலப்புறம் ஒரு டிசைன் துணி





## அடுத்த இதழில்...

- அரசியல் கட்சிகளை நுழைய விடாத கிராமம் — நேரடி ரிப்போர்ட்
- கிரிக்கெட் — நன்னடத்தை விதிகள் தேவையா?
- யுத்தமும் அதன் விளைவுகளும்.

இடப்புறம் ஒரு டிசைன் துணி என்ற ஃபேஷனுக்கு இப்போது நல்ல வ ர வே ற் பு. பாண்ட், சட்டை தவிர, சுரிதார் கூட ஆண்களிடையே பாபுலரான உடைதான். சில்க் துணியிலும், காட்டனில் கைவேலைப்பாடு செய்தும் சுரிதார்களை விழாக்களில் அணிந்து கொள்ள ஆண்கள் பெரிதும் விரும்புகின்றனர்'' என்கிறார் நாஸர்.

''மத்திய தர மக்களிடையே இன்று 'சூட்' பிரபலமாகியுள்ளது. முன்பெல்லாம் இரு மணம் என்றால் மணமகன் மட்டுமே சூட் அணிவார். இப்போது, மணமக்களின் உறவுக்காரர்கள் கூட சூட் அணிவதைப் பார்க்க முடிகிறது'' என்கிறார் கிஷன் சந்த் என்கிற தனியார் நிறுவன எக்ஸிக்யூட்டிவ்.

''இன்று ஆண்களுக்குரிய விதவிதமான உடைகள் பற்றிப் பல புத்தகங்கள், 'இம்ப்ரஷன்', 'மென்ஸ் லுக்' என்பன போன்ற தலைப்புக்களில் வண்ணப்படங்களுடன் வெளியாகின்றன. இளைஞர்கள், டைலரின் திறமையை, அவர்களிடமுள்ள ஃபேஷன் புத்தகங்களை வைத்தே எடை போடுகிறார்கள். இவற்றைப் புரட்டிப் பார்த்துத் தங்களுக்குப் பிடித்த ஸ்டைலைத் தேர்ந்தெடுக்கிறார்கள். எனவேதான், ஒவ்வொரு புத்தகமும் நூறு, நூற்றைம்பது ரூபாய் விலை என்றாலும் கூட டைலர்கள் தயங்காமல் வாங்கிக் கடைகளில் வைக்கிறார்கள்'' என்கிறார் கல்லூரி மாணவரான விக்னேஷ்.

இளைஞர்களுக்கு மட்டும்தான் ஃபேஷன் ஆசை என்பதில்லை. மவுண்ட் ரோடில் ஒரு தையற்கடைக்கு வந்த ஐம்பதுகளில் இருக்கும் ஒருவர் ''மாடர்னாய்த் தையுங்கள்; ரொம்ப மாடர்னாய் வேண்டாம்!'' என்று கேட்டுக் கொண்டதைப் பார்த்த போது, ஃபேஷன் ஆசைக்கு வயது வித்தியாசம் கிடையாது என்பது தெளிவாயிற்று!

— எஸ். சந்திரமௌலி.

அட்டை வண்ணப்படமும்,

படங்களும்: **உத்ரா.**

**யோசனை தெரிவித்த வாசகர்: ச. சுஃபியா, நெய்வேலி.**

(முழு விலாசம் இல்லை)

## பரபரப்பூட்டிய ஒளிவதற்கு ஓர் இடம்!

● அஞ்சனா மைக்கேல் ராஜின் 'ஒளிவதற்கு ஓர் இடம்' ஓர் அற்புதமான படைப்பு.
திருப்பதி. கே. வி. சந்திரசேகர்.

● வாராவாரம் பரபரப்போடு நான் படித்தது அஞ்சனா மைக்கேல்ராஜின் 'ஒளிவதற்கு ஓர் இடம்'தான்!
நந்தியநல்லூர். முத்து. ரவிச்சந்திரன்.



● ஒவ்வொரு வாரம் படிக்கும் போதும், 'அடுத்த நிகழ்ச்சி என்ன?' என்று எதிர்பார்க்க வைத்த இது, துப்பறியும் கதைகளுக்கு ஒரு மகுடம் என்றாலும் தவறில்லை.
காரைக்குடி. கே. கோவிந்தசாமி.

● ஆரம்பம் முதல் இறுதி வரை விறுவிறுப்பான சஸ்பென்ஸ். இவ்வளவு சீக்கிரம் தொடரை முடித்து விட்டார்களே என்று ஆதங்கப்படுமளவுக்கு இருந்தது!
கொணவட்டம். கே. ஆர். தேவேந்திரன்.

● அஞ்சனா மைக்கேல்ராஜின் தொடர் ஒரு விறுவிறு விருட்சம். அதில் க்ளைமாக்ஸ் கிளைகள் ஏராளம்! அத்தனையையும் சாப்பிட்டு விட்டது, 'இனிமேல்தான் கதை ஆரம்பிக்கப் போகிறது' என்ற கடைசிநேர க்ளைமாக்ஸ்.
காட்டூர். எஸ். அருள்மொழி.

● ஒவ்வொரு வாரமும் சஸ்பென்ஸோடு வெளிவந்த ''ஒளிவதற்கு ஓர் இடம்'' இத்தனை சீக்கிரமா முடிவடைந்து விட்டது என்கிற அளவுக்கு அருமை. ஜெயராஜின் ஓவியம் கதைக்கு மகுடம்.
முன்றடைப்பு. எஸ். ஆர். ஜெகநாத்.

# சாப்பிட எதுவுமே வேண்டாமென்றால் சரிவர அவன் வளர்வது எப்படி?

ஆம். சரியாக சாப்பிடாமல் இருப்பது குழந்தையின் வளர்ச்சியை பாதிக்கலாம்.

சரியாக சாப்பிடாமலிருக்கும் குழந்தை தனது உடலுக்குத் தேவையான ஊட்டச்சத்துக்கள் அனைத்தையும் முழுமையாகப் பெறுவதில்லை. இப்பற்றுக்குறை அவனது வளர்ச்சியை பாதிக்கக் கூடும். அவனுக்கு அளிப்பீர் காம்ப்ளான். அவன் இழந்த ஊட்டத்தைப் பூர்த்தி செய்ய காம்ப்ளான் உதவுகிறது. குழந்தையின் வளர்ச்சிக்குத் தலைசிறந்த புரதமாகிய பால் புரதம் 20% மற்றும் உடலுக்குத் தேவையான 22 அத்தியாவசியமான ஊட்டச்சத்துக்கள் அடங்கியதாகும் காம்ப்ளான்.

காம்ப்ளான் நாவிற்கினிய
5 சுவைகளிலே கிடைக்கிறது.







**காம்ப்ளான்®**

**திட்டமிட்ட பரிபூரண உணவு.**

GX/27/203 TAM

# இரு வித அனுகூலங்களுடன் உங்கள் குழந்தையைப் பள்ளிக்கு அனுப்புங்கள் !

## ருசி + ஊட்டச்சத்து கொண்ட பானி மிக்ஸ்.

ஆரோக்கிய வாழ்க்கைக்கு ஊட்டச்சத்து மிகுந்த உணவு தேவை. பானிமிக்ஸ் ஊட்டச்சத்து நிறைந்தது. எனவே உங்கள் குழந்தைக்கு இதனைத் தவறாமல் அன்றாடம் கொடுங்கள். இதில் சுவையான ஆப்பிள், மாம்பழம், பேரிச்சை, திராட்சை, முந்திரியுடன், கோதுமை, அரிசி மற்றும் சோளமும் அடங்கியது. இவை அனைத்தும் குழந்தைக்குத் தேவையான கூடுதல் சத்தை அளிக்க வல்லது

**பானிமிக்ஸ் தயாரிக்க எளிது**

சமைக்கத் தேவையில்லை

தேவையான அளவை கிண்ணத்தில் போடவும். முன்னமே கொதிக்க வைத்த பாலைச் சேர்க்கவும். மிருதுவான பாரிட்ஜ் கிடைக்க மெதுவாக கலக்கவும்.






உடல் நலத்தின் உறைவிடம் க்ளாக்ஸோ.

GL/3/89-R-TAM

# மலிவு விலைக் காப்பி!

என் மனைவி எப்போதுமே எனக்குத் தயாரிப்பது மலிவு விலைக் காப்பிதான். அதாவது, ஃபில்டரில் நாலாந்தரமாக வெந்நீர் ஊற்றி, எண்ணைக் கழுவின நீர் போல டிகாக்ஷன் மெலிசாக இருக்கும். அதோடு கொஞ்சம் பால் சேர்த்து, சூடும் இல்லாமல், சர்க்கரையும் போட மறந்து கொண்டு வந்து தருவாள்.

இப்படி ஒரு கண்ணராவியான காப்பியை அவள் தயாரிப்பது என்னுடைய சொந்த நன்மைக்குத்தான் என்பது வெகு நாளாக எனக்குத் தெரியாமலிருந்தது. ஒரு நாள் டாக்டர் சொன்ன பிறகுதான் புரிந்தது.

"காப்பி சாப்பிடுவது உங்கள் உடம்புக்குக் கெடுதல். உங்களுக்கு டயாபடிஸ் இருக்கிறது," என்றார் டாக்டர். இதை என் மனைவியிடமும் அவர் சொல்லியிருப்பார் போலும்.

வழக்கமாக முதல் டிகாக்ஷனில் கள்ளிச் சொட்டுப் பால் கலந்து கமகமவென்று பருகி வந்தவனை மனைவி, மலிவு விலைக் காப்பிக்குத் தள்ளிவிட்டாள். ஆனால் ஒரு நல்ல குணம் அவளிடம். ஒரேயடியாகக் 'காப்பி இடையாது' என்று எனக்குக் 'காப்பி மறுப்பு' செய்ய அவளுக்கு மனசாகவில்லை. குணவதி அல்லவா? நானாகக் காப்பியை வெறுப்பதற்காக இந்த மலிவு விலைக் காப்பியைச் சவசவவென்று சும்மா, ஓர் ஒப்புக்குத் தயாரித்து எனக்கு வழங்குகிறாள் என்று தெரிந்து கொண்டேன்.

ஒரு வாரம் பொறுத்துப் பார்த்தேன். சகிக்கவில்லை. அவளுக்கு மட்டும் கமகம வென்று முதல் டிகாக்ஷன் காப்பி. எனக்கு மட்டும் மலிவு விலைக் காப்பியா?

ஒரு நாள் இரவு எழுந்தேன். மனைவி அசந்து தூங்கிக் கொண்டிருந்தாள். கள்ளக் காப்பியை நானே தயாரிக்கலானேன். இக்காக டிகாக்ஷன் இறக்கிக் கொண்டேன். ஃபிரிட்ஜிலிருந்து பாலை எடுத்துக் கொதிக்க வைத்தேன். இறக்கும் போது — என்ன துரதிர்ஷ்டம் — பால் பாத்திரம் சாய்ந்து கொதிக்கிற பால் என் காலில் கொட்டி, நான் அலறி, கால் கொப்புளித்து நாலு வாரங்கள் கால் கட்டுடன் இருந்தேன்.

என் மனைவி சொன்னாள்: "கள்ளக் காப்பி தயாரித்து அனாவசியமாக உங்கள் காலைக் கையைச் கட்டுக் கொள்ள வேண்டாமென்றுதான் நான் மலிவுக் காப்பி தயாரித்துத் தருகிறேன். இப்போதாவது என் சேவை உணர்ச்சி புரிகிறதா?" என்று கேட்டாள்.

"போடி. மலிவு விலைக் காப்பின்னா




பா. ரா.

என்னவோ மாதிரி இருக்கு. நானே ரொம்ப 'சீப்' ஆகிவிட்ட மாதிரி இருக்கு. என்னை நீ ரொம்ப இன்ஸல்ட் பண்றே!'' என்றேன்.

''அடக்கடவுளே, இதுக்கா கவலைப்பட றீங்க? நாளைக்கே நான் அதன் பெயரை மாற்றிடறேன். உங்களுக்குப் பிடிச்ச ஒரு பேரைச் சொல்லுங்களேன். ஏதாவது ஒரு தலைவர் பெயர்?''

''எந்தத் தலைவரையும் எனக்குப் பிடிக் காது.''

''விசித்திரம். சரி. சினிமா நட்சத்திரப் பெயர் ஏதாவது?''

''ஆண் நட்சத்திரம் யாரையும் பிடிக் காது.''

''சரி, பெண் நட்சத்திரம்?''

''ஸ்ரீதேவி!''

''அப்போ, மலிவு விலைக் காப்பி என்ப தற்குப் பதில் 'ஸ்ரீதேவி காப்பி'ன்னு பெயரை மாற்றி வைச்சுடறேன். உங்களுக்குக் கட்டா யம் ரொம்பப் பிடிக்கும், பாருங்களேன்.''

அவள் சொன்னது நூறு சதவிகிதம் கரெக்ட். ராத்திரியெல்லாம் நான் தூங்கவே யில்லை. 'காலையில் எழுந்து ஸ்ரீதேவி காப்பி' சாப்பிடணும் என்று ஒரே துடிப்பு.

மனைவி வழக்கம் போல நாலாந்தா டிகாக்ஷன் வடித்து, சவ சவ என்று காப்பி தயாரித்தாள். ''உங்கள் ஸ்ரீதேவி காப்பி ரெடி!'' என்றாள்.

ஓடிப் போய் வாங்கி உற்சாகமாக மடக் மடக்கென்று குடித்தேன். 'ஆகா! ஸ்ரீதேவி காப்பி என்ன ருசி! என்ன ருசி!'

'பெயரில்என்ன இருக்கிறது?' என்பார்கள். என்னைக் கேட்டால், 'ருசியில் என்ன இருக்கிறது?' என்பேன். எல்லாம் பெயரில் தான் இருக்கிறது!

நான் மட்டும் இந்தக் கருத்தைக் கொண் டிருக்கவில்லை. நமது முதல்வர் கலைஞருக் கும் இதே கருத்து இருக்கக் கூடும் என்று தெரிகிறது. 'மலிவு விலை மது' என்ற பெயரை 'நாட்டு மது' என்று மாற்றியிருக் கிறார். குடிகார ஏழை மக்கள் முதல்வரை வாழ்த்துகிறார்கள்.

'மலிவு விலை மது அருந்துகிறவர்கள்' என்ற கேவல நிலையிலிருந்த எங்களை, 'நாட்டு மது' என்று ஒரு சின்னப் பெயர் மாற்றம் செய்து, எங்கள் அந்தஸ்தையே உயர்த்தி விட்டார் கலைஞர்' என்று பெரு மிதப்படுகிறார்கள்.

'நாட்டு மது' என்று சொல்லி அருந்துவ தால் நாட்டுப்பற்றும் கூடுதலாக ஏற்பட லாம் என்று முதல்வர் சமத்காரமாக விளக் கம் தரலாம்.

'நாட்டு மது' என்று பொதுவாக இருப் பதை 'தமிழ் மது' என்று பெயர் சூட்டியிருந் தால், ஒவ்வொரு குடிமகனும் தமிழ் உணர்ச்சியோடு குடித்து மகிழ்வான்.

எல்லாமே பெயரில்தான் இருக்கிறது. சரக்கில் இல்லை!



* வி. சி. ஆர். சி. ஆராய்ச்சி நிலையம்...

# கொசுவும் இல்லை; வியாதியும் இல்லை!

"கொசுவும் கிடையாது; வியாதியும் கிடையாது!" என்று சொல்பவர்கள் எங்கேனும் இருக்கிறார்களா? இருக்கிறார்கள்!

"மலேரியாக் காய்ச்சல்; வைரஸ் காய்ச்சல் என்று திடீர் திடீரென்று எங்களூரில் நோய்கள் வந்த காலம் ஒன்று உண்டு. ஆனால் இப்போது சுத்தமாக இல்லை. காரணம், பாண்டிச்சேரியில் செயல்பட்டு வரும் 'வெக்டார் கண்ட்ரோல் ரிசர்ச் சென்டர்' (VCRC) என்னும் நிறுவனம்தான்..." என்கிறார்கள் பாண்டிக்கு அருகிலுள்ள புதுக்குப்பம் கிராமத்தைச் சேர்ந்த மக்கள்.

"அவர்கள் வந்து என்ன செய்தார்கள்?"

"எங்கள் கிராமத்தில் தேங்கிக் கிடந்த நீர்நிலைகளில் கூட்டம் கூட்டமாகக் குடித்தனம் செய்து கொண்டிருந்த கொசுக்களை ஒழித்தார்கள். ஒழிக்கும் முறைகளைச் சொல்லித் தந்தார்கள். சுற்றுப்புறத்தின் சுத்தம் பற்றிய அவசியங்களை எடுத்துச் சொன்னார்கள். கொசுக்கள் ஒழிந்து விட்டால் வியாதிகள் ஏது?" என்கிறார்கள் கிராம மக்கள்.

வி. சி. ஆர். சி. நிறுவனத்தின் பணிதான் என்ன? அறுபது விஞ்ஞானிகள் உட்பட முந்நூறுக்கும் மேற்பட்டவர்கள் பணியாற்றும் அதன் நிர்வாகத்தில் முக்கிய பொறுப்பு வகிக்கும் பி. கே. தாஸிடம் கேட்டோம்.

"புதுதில்லியிலுள்ள அகில இந்திய மருத்துவ ஆராய்ச்சிக் கழகத்தின் கீழ் செயல்படுவதுதான் இந்நிறுவனம். இதற்கு இந்திய அரசின் நிதியுதவியோடு உலக சுகாதார நிறுவனத்தின் உதவிகளும் உண்டு. 75-இல் பாண்டிச்சேரியில் ஆரம்பிக்கப்பட்ட இது, கொசுக்களைப் பற்றிய மிக விரிவான ஆராய்ச்சியிலேயே முக்கிய கவனம் செலுத்துகிறது.

"குறிப்பாக மலேரியா, யானைக்கால் வியாதிகளைப் பற்றி மிகவும் தீவிரமாக ஆராய்கிறோம். எங்கெங்கு கொசுக்கள் அதிகமாக உள்ளனவோ அங்கெல்லாம் சென்று, பல்வேறு வகைப்பட்ட கொசுக்களையும், பிடித்துக் கொண்டு வந்து, இனப்பெருக்கம் செய்து அவற்றின் தன்மைகளை ஆராய்கிறோம். ரசாயனப் பூச்சிக் கொல்லிகள் மூலம் கொசு ஒழிப்பது தவிர, அவற்றின் இனப் பெருக்கத்தைக் கட்டுப்படுத்தக் கூடிய வழிமுறைகளையும் ஆராய்கிறோம். இது ஒரு புதிய துறை. கொசுக்களை ஒழிக்கச் சிலவகை பாக்டீரியாக்களும் உதவுகின்றன. அவை குறித்தும் ஆய்வு நடத்துகிறோம். மீன் வளர்ப்பு; கொசு விரட்டிகள் ஆகியனவும் எங்கள் கவனத்தைக் கவர்கின்றன.

"நாங்கள் வெறும் ஆராய்ச்சியோடு திருப்தி விடுவதில்லை. மக்களிடம் சென்று கொசுக்களால் பரவும் நோய்களைப் பற்றி எடுத்துச் சொல்லி, அவற்றை ஒழிப்பதன் அவசியத்தையும் விளக்குகிறோம். அப்படிப்பட்ட கிராமங்களில் ஒன்றுதான் புதுக்குப்பம்.

"அந்தக் கிராமம் கடலை ஒட்டிய கிராமம் என்பதால் ஆங்காங்கே சிறுசிறு குட்டைகளாக நீர்த்தேக்கங்கள். அவற்றின் மீது ஏராளமாகப் பாசிகள் படிந்திருந்தன. அதனால் கொசுக்களெல்லாம் அந்தப் பாசிகளின் மேல் முட்டையிட்டுக் கொண்டிருந்தன. சாதாரணமாக நீர்த் தேக்கங்களில் கொசுக்கள் இடும் முட்டைகளை அங்குள்ள மீன்கள் சாப்பிட்டுவிடும் என்றாலும் இங்கே நீரின் மேற்பரப்பில் படிந்திருந்த பாசிகளின் மேலேயே கொசுக்கள் முட்டையிட்டதால் மீன்கள் சாப்பிட முடியாத நிலை. அதனால் கொசுக்கள் அதிகமாகி நோய்களும் அதிகமாயின.

"இதைக் கண்ட நாங்கள் மக்களிடம் விஷயத்தை விளக்கினோம். அதோடு அந்தப் பாசிகள் காகித உற்பத்திக்குப் பயன்படுகிற பொருள் என்பதால், அதை எங்கெங்கு விற்கலாம் என்பதையும் எடுத்துச் சொல்லி மக்களை உற்சாகப்படுத்தினோம். அதன்படியே செய்தார்கள், எனவே வருமானம் வந்தது; கொசுக்கள் ஒழிந்து நோய்களும் பறந்து விட்டன!" என்றார் பி. கே. தாஸ்.

— திருவைக்குமார்.




யோசனை
தெரிவித்த வாசகி:
கீதா.


கருணாநிதி

தொலைச்சுப்புடுவேன், ஜாக்கிரதை...!

டிஸ்மிஸ் பண்ண மாட்டேன்!

தொலைச்சுப்புடுவேன், ஜாக்கிரதை...!

டிஸ்மிஸ் பண்ண மாட்டேன்!
ஜெயலலிதா

ராஜீவ்


சரத்பவார்
உன்னையும் உதைக்கணும் போல குறுகுறுன்னு இருக்கு!
இ. காங்கிரஸ்



**கல்கி**

1991 ஜனவரி 27
மலர் : 49 இதழ் : 26
பிரமோதூத தை 14



# யுத்தம்

ஆட்சியிலுள்ள ஒருவரின் மூடப் பிடிவாதத்தால் மக்கள் துயரம் அடைவதென்பது புராண இதிகாச காலத்திலிருந்து இன்று வரை பலமுறை நடந்திருக்கிறது. என்றாலும் இந்நாளில் இப்படி நிகழ்வது மக்களுக்கு இழைக்கப்படும் மாபெரும் கொடூர அநீதியாகும். ஏனெனில் நவீன விஞ்ஞானம் அழிக்கும் ஆற்றலை அந்த அளவுக்கு வளர்த்து வைத்திருக்கிறது.

'இதோ, விமானங்கள் பறக்கின்றன; ஏவுகணைகள் பாய்கின்றன; குண்டு மழை பொழிகிறது' என்றெல்லாம் படிக்கும் போதும் டி.வி.யில் பார்க்கும் போதும் பரபரப்பாக இருக்கும். ஆனால் அவை ஏற்படுத்தும் சர்வநாசம் கற்பனைக்கும் எட்டாத ஒன்று. அந்த அழிவின் முழுப் பரிமாணமும் யுத்தம் முடிந்த பிறகுதான் தெரியவரும்; அப்போது நெஞ்சைச் சோகம் மலையாக அழுத்தும். யுத்தம் நடக்கிற அந்த நாட்டில் மட்டும்தான் துயரம் என்பதல்ல. அந்த அளவுக்கு இல்லா விட்டாலும் பொருளாதாரப் பாதிப்பு காரணமாக, உலகெங்கும் மக்களுக்குக் கஷ்டங்கள் உண்டாகும். அணு ஆயுதங்களை இந்தப் போரில் பயன்படுத்தவில்லை என்று கூறப்பட்டாலும் அணு உலைகளை அழிக்கும் போதும் ரசாயன ஆயுத ஆலைகளைத் தகர்க்கும் போதும் கிளம்பும் விஷம், பல ஆயிரம் மைல்களுக்கு நச்சுச் சூழலை உருவாக்கி, மக்களைச் சிறுகச் சிறுக நெடுங்காலத்துக்கு வதைக்கும்.

அழிவால் ஏற்படும் கணக்கிட முடியாத நஷ்டத்துடன் யுத்தம் முடிந்த பின் நடக்கும் புனர் நிர்மாணப் பணியில் செலவிடப்படும் தொகையையும் சேர்த்துக் கொள்ள வேண்டும். ஒரு வல்லரசு போரில் ஒரு நாட்டை அழிக்கும் போது பின்னால் அதன் புனர் நிர்மாணப் பணியிலும் பங்கேற்க வேண்டிய தார்மீகக் கடமை அந்த வல்லரசுக்கு வந்து சேர்கிறது. இந்தச் செல்வத்தையெல்லாம் உலகின் பிற்படுத்தப்பட்ட நாடுகளின் வளம் பெருகவும் ஏழைமை ஒழியவும் ஆக்கபூர்வமாகப் பயன்படுத்தியிருக்கலாமே என்ற ஏக்கம் சிந்திக்கத் தெரிந்த எவருக்கும் ஏற்படும்.

இத்தனை பின்விளைவுகளை உள்ளடக்கிய ஒரு யுத்தத்தைத் தவிர்க்க முடியாத தாக்கிய வகையில் சதாம் உசேன் மன்னிப்புப் பெற முடியாத முதல் குற்றவாளியாகிறார். ஈரானுடன் தொடர்ந்து பல ஆண்டுகளாக நடத்திய யுத்தத்தில், அவர் பயங்கரமான ரசாயன ஆயுதங்களைப் பயன்படுத்தி ஈரானிய வீரர்களையும் மக்களையும் சித்திரவதை செய்தவர். ஆயினும் ஈரானை அவரால் வெற்றி கொள்ள முடியவில்லை. அந்த அவமானத்தைத் துடைக்கத்தான் திடுமென ஒரு நாள் குவெய்த் மீது படையெடுத்து, அதனை ஆக்கிரமித்ததுடன் அதனை ஈராக்கின் ஒரு மாநிலமே என்பதாகவும் அறிவித்தார். இந்த அதர்மத்தை உலக நாடுகள் அனைத்துமே கண்டித்தன. ஐ. நா. சபை, குவெய்த்தை விட்டு வெளியேறுமாறும் அல்லது போரைச் சந்திக்கத் தயாராகுமாறும் அறிவித்து, காலக்கெடு நிர்ணயித்தது. உலக நாடுகள் பல, அமெரிக்கா தலைமையில் அணி சேர்ந்து ஆக்கிரமிப்பாளரைத் தாக்கத் தயாராயின. இந்த அணியில் சேர்ந்து நேரடியாக யுத்தத்தில் ஈடுபட விரும்பாத நாடுகளும் இந்த அணிக்குத் தார்மீக ஆதரவு அளித்தன.

இவ்வளவு நடந்த பிறகும் பலமுறை எச்சரிக்கப்பட்டும் சதாம் உசேனின் மூடப் பிடிவாதமே முன்நின்றது. அவர் பதவிக்கு வந்த விதமே கொடூரம் நிறைந்த சரித்திரம் என்பதைக் காணும் போது அந்த நோயுற்ற மனத்தை நம்மால் புரிந்து கொள்ள முடிகிறது; ஆனால் மன்னிக்க முடியவில்லை. கடைசி முயற்சியாகப் போரைத் தவிர்க்க பிரெஞ்சு அரசு கூறிய யோசனைகளில், இந்தப் போருக்கு நேரடித் தொடர்பு சற்றும் இல்லாத பாலஸ்தீனப் பிரச்னையில் கூட ஓரளவு விட்டுக் கொடுக்கும் திட்டமும் உள்ளடங்கியிருந்தது. அப்படியும் கூட சதாம் உசேன் அசைந்து கொடுக்காது, துரியோதனத்தனத்தையே வெளிப்படுத்தினார்.

'குவெய்த்தை விடுவிக்கும் தார்மீக யுத்தம் இது' என்பதாக அமெரிக்கா, மற்றும் அதன் நேச நாடுகள் கூறுவதை மறுக்கவே முடியாது. ஆயினும் அமெரிக்கச் சுயநலமும் உள்ளடங்கித்தான் இருக்கிறது! அரேபிய எண்ணெயைக் கட்டுப்படியாகும் விலையில் உலகம் பயன்படுத்திக் கொள்ள இடையூறு ஏதும் இருக்கக் கூடாது என்பது வெளிப்படை நோக்கம். அமெரிக்காவிடமே ஏராளமான பெட்ரோலியக் கையிருப்பு உள்ளபோதிலும் அதனைத் தற்போது குடைந்தெடுத்துப் பயன்படுத்த அது விரும்பாமல், சேமிக்கவே ஆசைப்படுகிறது என்பது சுயநலத்துடன் கூடிய உள்நோக்கு. தேசப் பாதுகாப்பு ரீதியாக இதற்கு வலுவான காரணங்கள் உள்ளன.

இத்தனை இருளுக்கு மத்தியில் ஒரே ஒரு ஒளிக்கீற்று, யுத்தத்துக்கு உலகம் முழுவதும் எழுந்துள்ள எதிர்ப்பு. தவிர்க்க முடியாமல் ஈராக்கை இன்று தாக்குவோரும் கூட யுத்தத்தை விரும்பவில்லை. இந்த எதிர்ப்பும் வெறுப்பும் கலந்த ஒளிக்கீற்று, உலகின் விடியலாக மலரட்டும்.

---

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடு பாப்பா. — பாரதியார்.

திரை விழாப் படக்கதை
(கனடா)

# கண்ணெதிரே ஒரு கொள்ளை!



11/91

கிறிஸ்துமஸ் நேரம். பரிசுப் பொருள் வாங்குவதற்காக அந்த டிபார்ட்மெண்டல் ஸ்டோருக்குள் நுழைந்தான் லூயி. உள்ளூர் வானொலி நிலையத்தில் நிருபர். செய்திக் காகத் துருதுருக்கும் அவன் கண்களுக்கு அந்தக் காட்சி உடனே தென்பட்டது. சற்றுத் தொலைவில் ஒதுக்குப்புறமாக இருவர். தாழ்ந்த குரலில் பேசிக் கொண்டிருந்தனர். ஒருவன் தன் கோட்டைச் சற்றுப் பிரித்து மற்றவனுக்குக் காண்பிக்க, அவன் இடுப்பில் செருகப்பட்டிருந்த துப்பாக்கி அந்தக் கணத்தில் லூயியின் பார்வையில் பட்டுவிட்டது!

கறுகறுப்பாக வியாபாரம் நடந்து கொண்டிருந்த நேரம். எக்கச்சக்கமாகப் பணம் புரண்டு கொண்டிருந்த சந்தர்ப்பம்... லூயிக்குப் புரிந்துவிட்டது. ஒரு கொள்ளை நடக்கப் போகிறது. அதுவும் அவன் கண் முன்னே. அதை நேரில் பார்க்கும் செய்தி யாளன் அவன் ஒருவனாகத்தான் இருக்க முடியும்...

அவனுள் பரபரப்புத்தோன்றியது. மேலே அந்த ஸ்டோரின் அலுவலகத்துக்குள் அந்த இருவரும் நுழைந்து கொண்டிருந்தது தெரிந் தது.

திடுமென மேலே இருந்து கூச்சல்.

"கொள்ளை... கொள்ளை..."

அவர்கள் இருவரும் ஓடிவர, பின்னே சிலர் துரத்திவர, படிக்கட்டையொட்டியி ருந்த பகுதியில் கூடியிருந்த கூட்டத்தினரி டையே குழப்பம். மக்கள் அங்கும் இங்கும் அலைமோத, வேகமாக இறங்கி வந்த அவ்விருவரையும் நோக்கிச் சிலர் பாய்ந்து செல்ல —

துப்பாக்கி வெடிக்கும் ஒலி!

லூயியின் பார்வை அந்த இருவர் மீதே நிலைத்திருந்தது. குட்டவன் கையில் துப் பாக்கி. மற்றவன் கையில் ஒரு தோல்பை. அதில்தான் கொள்ளையடிக்கப்பட்ட பணம் இருக்க வேண்டும். குட்டவனைப் பிடிக்க வேண்டும் என்கிற முனைப்பில் கூட்டம் அவன் மீது பாய்ந்தது. அந்த அமளி மற்றவ னுக்குத் தப்பிச் செல்ல வசதியாகப் போயிற்று.

அடித்துப் பிடித்து அந்தக் கூட்டத்தி னூடே புகுந்து புறப்பட்டு ஸ்டோர் வாசலை யடைந்தான். படியிறங்கினான். நடக்க ஆரம் பித்தான்.

பிடிபட்டவனைப் பற்றி லூயி கவலைப் படவில்லை. அவனைப் போலீசார் பார்த்துக் கொள்வார்கள். அதில் அவனுக்குக் கதை யெதுவும் கிடைக்காது. வெறும் செய்திதான் அது. எனவே, வெளியேற முற்பட்டவனைத் தொடர்ந்து வாசலுக்கு வந்தான்.

தெருவெங்கும் புதைசேறாகப் பனி மண்டிக் கிடந்தது. பனிப்புயல் வேறு கடு மையாக வீசிக் கொண்டிருந்தது. லூயி தன் காரை நோக்கி ஓடி வண்டியைக் கிளப்பி னான். முன்னே தோல்பையுடன் வேகமாக நடந்து கொண்டிருந்தவனை மெதுவாகப் பின்தொடர்ந்தான்.

திடுமென அவனுடைய கார் பனிச் சேற் றில் சிக்கிக் கொண்டது. தடக்கென்று இறங்கிக் கூவினான்.

"ஹேய் மேன்! வந்து ஒரு கை கொடு."

முன்னே சென்று கொண்டிருந்தவன் நின்று திரும்பினான்.

"உன்னைத்தான். வண்டி மாட்டிக் கொண்டு விட்டது. ஒரு தள்ளு தள்ளி விடு..."

நின்றவன் யோசித்தான். தயங்குவதோ, ஓடுவதோ அவனைக் காட்டிக் கொடுத்து விடும். எனவே —

காரை நெருங்கினான்.

லூயி உள்ளே அமர்ந்து வண்டியைக் கிளப்பி என்ஜின் வேகத்தை அதிகப்படுத்த, மற்றவன் அதைத் தள்ளி உதவ, கார் விடு பட்டது.

"தேங்க்ஸ் மேன். ஏறு. எங்கே போக ணுமோ கொண்டு போய் விட்டுடறேன்."

கார் ஓடிக் கொண்டிருந்தது. சிறிது நேர மௌனத்துக்குப் பின் லூயி மெது வாகக் கேட்டான்.

"உன் பேரு?"

"ஜெரார்ட்."

"இப்போ எங்கே போகணும்?"

"ஒரு நண்பன் வீட்டுக்கு."

அந்த நண்பனும் முதலில் அந்தக் கொள் ளையில் உதவி செய்வதாக இருந்தான். டிபார்ட்மெண்டல் ஸ்டோர் வரையில் வந்த வன் கடைசி நொடியில் பயந்து போய்ப் பின்வாங்கிவிட்டான். இப்போது —

ஜெரார்டிடம் பை நிறையப் பணம். உதவு வதற்கு அந்த நண்பனைத் தவிர வேறு யாரு மில்லை...

"நிறுத்து. இடம் வந்துடுச்சு."

இறங்கி, வண்டி புறப்பட்டுப் போகும் வரையில் நின்று, பிறகு அந்த வீட்டை நோக்கி நடந்தான்.

எதிர்பார்த்த உதவி ஜெரார்டுக்குக் கிடைக்கவில்லை. நண்பன் பயந்து பின் வாங்கினான்.

"வெறும் கொள்ளையாக இருந்தால் பர வாயில்லை. இப்போது இது கொலையில் முடிந்து விட்டது. நம்மால் முடியாதுப்பா. வேண்டுமென்றால் பணத்தை இங்கே வைத்து விட்டுப் போ. அதற்குமேல் உனக்கோ, அவனுக்கோ எதுவும் என்னால் செய்ய முடியாது."



ஏமாற்றத்துடன் வெளியே வந்தான் ஜெரார்ட். மனம் கனத்தது. பையும் கனத்தது. பிடிபட்டவனை விடுவிக்க வேண்டும். எப்படியாவது... எப்படியாவது...

''ஏறிக்கோ.''

குரல் கேட்டு அதிர்ந்து நின்றான்.

அந்தக் கார். அதனுள் லூயி.

''நீ... நீ... போகவில்லை?''

''இல்லை. போவது போல் பாசாங்கு செய்து உனக்காகத் திரும்பி வந்து காத்திருந்தேன். உனக்கு உதவி செய்ய என்னால் முடியும்.''

''என்ன உதவி? எதற்காக உதவி?''

''டிபார்ட்மெண்டல் ஸ்டோரில் நடந்த நிகழ்ச்சியை நேரில் பார்த்தேன். உன்னை அடையாளம் தெரிந்த ஒரே ஆள் நான்தான். நான் உனக்கு உதவி செய்யத் தயார்.''

அவன் ஏறி அமர, வண்டி புறப்பட்டது.

லூயி கேட்டான், ''பிடிபட்ட அந்த ஆள் யாரு?''

''அவன் பெயர் நார்மண்ட். என் அண்ணன். அது மட்டும் இல்லை. என் அம்மா, அப்பா, குரு எல்லாமே அவன் தான். அவனை விடுவிக்க வேண்டும்.''

''நான் வழி செய்யறேன்.'' திட்டத்தை விவரித்தான் லூயி. ஜெரார்டுக்குப் பிடித்துப் போயிற்று.

**வா**னொலி நிலையத்தினுள் நுழைந்த போது உள்ளே ஒரே பரபரப்பாக இருந்தது. லூயியைப் பார்த்தவுடன் டைரக்டர் கேட்டார்:

''எங்கே போய்விட்டாய்? டிபார்ட்மெண்டல் ஸ்டோரில் கொள்ளை, கொலை. ஒருவன் பிடிபட்டு விட்டான். இன்னொருத்தன் தப்பியோடி...''

''எங்கேயும் போகவில்லை. இதோ என் பக்கத்தில்...''

''என்ன! என்ன!''

''ஆமாம். மற்ற நிகழ்ச்சிகளை நிறுத்திடுங்க. உடனே அறிவிப்புச் செய்து, தப்பித்தவனுடன் ஒரு நேர்முகப் பேட்டி!''

''ஸென்ஸேஷனல்...''

பரபரத்தார் டைரக்டர்.

பேட்டி தொடங்கியது.

தன்னைப் பற்றியும் தன் அண்ணனைப் பற்றியும் விவரமாகச் சொன்னான் ஜெரார்ட். முடிவாக அவன் சொன்னது:

''லூயி இப்போது ஒரு பணயக் கைதி. என் துப்பாக்கி அவனை நோக்கி. போலீஸ் உடனே என் சகோதரனை விடுவிக்கா விட்டால், நடைபெறப் போவது லூயியின் மரணம்...''

**ப**த்து நிமிடங்களுக்குள் போலீஸ் வானொலி நிலையத்தைச் சூழ்ந்து கொண்டது. உள்ளே வந்த அதிகாரி நிலைய டைரக்டரிடம் கத்தினார். ''இந்தப் பேட்டியை உடனே நிறுத்துங்க. இது நீடிக்க முடியாது.''

''நோ,'' மறுத்தார் அவர். ''இது ஒரு ஸ்கூப். இதைக் கைவிட முடியாது.''

''அப்போ, உள்ளே இருக்கிற லூயியின் கதி?''

''ஜெரார்டுடன் போனில் பேசுங்க. சமாதானமா ஒரு முடிவுக்கு வாங்க. உங்க பேச்சும் ஒலிபரப்பு ஆகட்டும்...''

**போ**லீஸ் அதிகாரியிடம் மிகக் கண்டிப்புடன் சொன்னான் ஜெரார்ட்.

''முதலில் என் அண்ணனைப் போனில் பேசச் சொல்லுங்க. அதுக்கப்புறம்தான் மற்றதெல்லாம்.''

''**ஜெ**ரார்ட், என்ன காரியம் செய்துட்டே? எதுக்காகப் பணத்தை உன்கிட்டே கொடுத்து ஓடச் சொன்னேன்? எங்கேயாவது தப்பியோடி நீ சுகமா வாழணும்னு தானே?'' போனில் வந்த நார்மண்டின் குரலில் வருத்தம் நிறைந்திருந்தது.

''எனக்கு வேண்டியது உன்னோட விடுதலை. அதுக்காகத்தான் இப்படிச் செய்தேன்.''

''அது இனிமே முடியாது ஜெரார்ட். காரியத்தைச் சிக்கலாக்கிட்டே. பேசாம நீயும் சரண் அடைஞ்சிடு.''

''நோ...'' போனை வைத்துவிட்டு மைக்கில் கத்தினான்:

''இப்போ நான் லூயியின் கழுத்துல துப்பாக்கியை வச்ச நிலையில வெளியில வரப் போறேன். யாராவது தடுக்க முயற்சி செய்தால் லூயி க்ளோஸ்.''

**அ**வர்கள் வெளியே வந்தார்கள். ரேடியோ நிலையத்தில் யாரும் தடுக்கவில்லை. ஆனால் தெருவில் —

சுற்றிலும் துப்பாக்கி ஏந்திய போலீசார்!

ஜெரார்டை விரக்தி சூழ்ந்தது. அண்ணனைக் காப்பாற்ற எடுத்துக் கொண்ட முயற்சி தோற்று விட்டது. இனி அவன் தப்பிச் சென்று என்ன பிரயோஜனம்? தனக்கு உதவ முன்வந்த லூயியிடம் அவனுக்கு ஒரு பாசமும் ஏற்பட்டிருந்தது. லூயிக்கு இரண்டு குழந்தைகள்... மனைவி... ஜெரார்ட் தெரிந்து கொண்டிருந்தான்...

துப்பாக்கியைத் தன்னை நோக்கியே திருப்பினான் ஜெரார்ட். அடுத்த நொடியில் அது வெடித்தது.

தொலைவில் ஒரு காரின் மீது நின்ற டெலிவிஷன் காமெரா அதையும் படம் பிடித்துக் கொண்டிருந்தது.

— **ஸி. ஆர். கே.**

# தையல்காரன்



அடுப்பூதப் புல்லாங்குழல் கேட்பார்களா? வீணையின் கம்பியில் சரத்துணி உலர்த்துவார்களா? நடந்திருக்கிறது. மகேந்திரனை மகா மசாலா படத்திற்குக் கதை, திரைக்கதை, வசனம் எழுத வைத்திருக்கிறார்கள்.

கதை?

ஒரு நாளைக்கு இருபத்தஞ்சு ரூபாய் வருமானம் வந்துவிட்டாலே கடையை இழுத்துச் சாத்திவிடுகிற தையல்காரன் பார்த்திபன். உறவுகள் இல்லாத அநாதை. கல்யாணம் என்றாலே விலகி மறைபவர். தனிமையான இவர் வாழ்க்கையில், வகைக்கு ஓர் உறவு என வந்து சேர்கிறார்கள். சஹாராவில் பயிர் வளர்கிறது. அவரவர்கள் அவசியமான சந்தர்ப்பங்களில் பிரிய, மறுபடி தனிமை. பக்கத்து நாயர் கடை ஓமனாவின் புதிய காதல். நிறைவு.

தையல்காரன் வாழ்க்கையில் குறுக்கிடும் முதல் தையல் ஐஸ்வர்யா. தாமரைக்குள வம்பு. அடுப்படியில் தேள்கடி எனக் காதலனை மடக்க இவரின் உத்திகளும், முயற்சிகளும். இளமையும், துருதுருப்பும் வெயில்கால ஐஸ்வாட்டர். மற்றொரு தையல் கேரள இறக்குமதி, ஸ்ரீஜா. அலட்டிக் கொள்ளாமல் ரசிக்க வைக்கிறார்.

எந்த ஊர் இந்த ஊர்?

பச்சைப் பசேல் என்று விஸ்தாரமான வயலும், அதில் சிறிப் பாய்ந்து விரையும் காற்றும், பனி விபூதி பூசிய மலைச்சிகரங்களும், வினோதப் பாறைகளும் வித்தியாசமாகத்தான் இருக்கின்றன. ஒளிப்பதிவு: வினாயகம்! ஆனால் இன்ஸ்பெக்டரின் கோணத்தில், படுத்திருக்கும் ஐஸ்வர்யா மீது காமிராவின் பார்வை ' மட்டரகமான அத்துமீறல்.

டைரக்ஷன்: வெற்றிப்பட டைரக்டர் எஸ். பி. முத்துராமன் இதில் மாறுதலாய் முயற்சி செய்திருக்கிறார். பார்த்திபன், மகேந்திரன், ஐஸ்வர்யா என பட்டாளமே இருந்தும்... காதல், சோகம், வீரம் என எல்லாவற்றையும் இணிக்க ஆசைப்பட்டு... பல சரக்குக் கடையில் சாமான்கள் வாங்குதல், புதுச் செருப்பு அணிந்திருத்தல் என ஒரு சில காட்சிகளைத் தவிர மற்ற பகுதியில்: எழுபதுகளில் நாம் தவறவிட்டுச் சாவகாசமாக இப்போதுதான் பார்க்கிற மாதிரி படம் முழுக்க ஒருவித அலுப்பு!

— சுந்தர்ஜி.




"அருமையான தலைப்புலே டி. வி. சீரியலுக்கு ஒரு கதை குடுக்கப் போறேன்... அநேகமா செலக்ட் ஆயிடும்."

"என்ன தலைப்பு?"

"பணம் ரெடி."

# மேரா பாரத் மஹான்

என்றும் புதுமையுடன் உதிக்கும் சூரியனும்



சந்திரனும், பறவைகளும்

வாழ்வில் பொலிவூட்டும் மலர்களும்,
மலர் நிறைந்த சோலைகளும்
மலைகளும், வனாந்திரங்களும்,



மனதைக் குளிர்விக்கும் மழையும், மனதை
சாந்தமாக்கும் குளிர் தென்றலும், ஓடைகளும்
ஆறுகளும், அமைதியான ஆற்றின் கரைகளும்,





ஆழ் கடலும், இவையெல்லாம்
நமது பாரதச் சொத்தல்லவா!

நமது ஒருங்கிணைந்த, ஒற்றுமையான பாரதம் நமது நாட்டின் ஒளிமிகுந்த, உன்னதமான முன்னேற்றத்திற்கு வழி அமைக்கும். மேரா பாரத் மஹான்

நம்முடைய சுதந்திரம்,
குடும்பத்திலும், சமூகத்திலும்,
நாட்டிலும் நன்மை பயக்கட்டும்.



The South Indian Bank Ltd

Regd. Office : Trichur, Kerala

# நேசிக்கத் தெரிந்தவள்

"ஜெய்ம்மா, இந்தக் கவிதையைப் பாரேன்...."

"ப்ச்! என்ன இது ஜெய்ம்மா, தேமா, புளிமான்னு?"

"உன்னை இப்படிக் கூப்பிட்டா என் மனசுல ஒரு குழைவு கிடைக்குதும்மா."

"இதோ பாருங்க.... அழகான என் பெயரான ஜெய்ஸ்ரீயை முழுசாவே கூப்பிடுங்க. இருக்கறது மூணு எழுத்துத்தானே!"

பட்டென்று முகத்திலடித்தாற் போல வந்த என் மனைவியின் வார்த்தைகளால் மனம் சுருங்கியது. இதில் நான் சொல்ல வந்த கவிதையின் அழகு அடிபட்டுப் போனது.

மௌனமானேன்.

இதில்தான் என்று இல்லை. பல விஷயங்களில் எங்கள் இருவரின் கருத்தும், ரசனையும் ஒத்துப் போனதில்லை.

நான் கவிஞன். அழகான ஓவியம், சிற்பங்களைக் கண்டால் உலகை மறப்பவன்.

இவளோ நேர் எதிர்!

கேட்டால், "எமோஷனலா வாழறது எனக்குப் பிடிக்காதுங்க. பிராக்டிகலா வாழ் கையைப் பார்க்கப் பழகிக்குங்க" என்று என்னிடம் திருப்பி லெக்சர் அடிப்பாள்.

ஒரு நாள் டீ. வி. யில் மதியம் அந்தப் படத்தைப் பார்த்துவிட்டு என்னால் ஒரு நிலையில் இருக்க முடியவில்லை.

"காதலையும் அதன் பிரச்னைகளையும் என்ன ஒரு கவிதையாகக் கொடுத்திருக்கார் அந்த டைரக்டர்" என்று நெகிழ்ந்தேன்.

"சகு! நல்ல மூடையே கெடுத்துருச்சே இந்தப்படம்! நம்மளைச் சுற்றி நடக்கற பிரச்னைகளிலிருந்து விடுபடலாம்னு சினிமாப் பார்த்தால் அதுலேயும் இதே தானா?"

"என்ன ஜெய் இப்படிச் சொல்லிட்டே? படத்துல ஒவ்வொரு கேரக்டரையும் எப்படிச் செதுக்கியிருக்காங்க பார்த்தியா?"

"ஆ...மா! வீதிக்குப் போனா இதைப் போல ஆயிரம் காரக்டர், ஆயிரம் காதலர்கள்...." என்றாள் அலட்சியமாக.

இதற்கு மேல் அவளுடன் விவாதிக்க என் மனம் இடங்கொடுக்கவில்லை.

என் ரசனைகளிலிருந்து முற்றிலும் மாறு



பட்ட இவளை மணந்து கொண்டது தவறோ?

அவசரப்பட்டுவிட்டேனோ...?

எங்களுக்கு மணமாகி ஆறுமாதம் தான் ஆகிறது. அதற்குள் மனத்தில் இந்த முரண்பாடான எண்ணம் தலை தூக்கியது. அதிர்ச்சியைத் தந்தது.

இந்த பந்தத்தில் இணைந்து நடக்க வேண்டிய காலமும் தூரமும் பயமுறுத்தியது.

"ஜெயம்மா. இன்னிக்கு ராத்திரி சமையல் வேண்டாம். ஹோட்டலுக்குப் போகலாமா?"

"வேண்டாங்க. நீங்க மட்டும் வேணாப் போயிட்டு வாங்க."

அவளின் மறுப்பு கோபப்படுத்தியது.

"ஏன்?"

"இன்னிக்கு வெள்ளிக்கிழமை. நான் விரதமிருக்கேன். உப்பு, புளி சேர்க்கக் கூடாது."

"விரதமா....!" என்றேன் ஆச்சரியத்துடன். "எதுக்கு விரதம்?"

"எல்லாம் உங்களுக்காகத்தான். போன வாரம் ஜுரம்னு மூனு நாள் படுத்திருந்தீங்களே அப்ப வேண்டிக்கிட்டேன். உடம்பு நல்லாயிட்டா ஒன்பது வாரம் விரதம் இருக்கிறதா..."

அவள் பதில் என்னைச் சற்று உருக வைத்தது. இருந்தாலும் என் கேள்வியை அடக்க முடியவில்லை.

"விரதம், கிரதமெல்லாம் உன் பிராக்டிகல் வாழ்க்கைக்கு ஒத்து வராதே. அதெல்லாம் சென்டிமென்ட்டல் — எமோஷனலாச்சே!" என்றேன் கேலியாக.

"இதுவும் பிராக்டிகல்தான். உங்களைச் சுற்றித்தானே நான். உங்களுக்கு எதாவது ஒண்ணுன்னா என்னாலே தாங்க முடியாதுங்க. என் வாழ்க்கையை உங்க கையில என்னைக்கு ஒப்படைச்சேனோ.... அன்னியிலிருந்து உங்க நலன்தான் எனக்கு முக்கியம்..." என்று தழுதழுத்தவளை பிரமிப்புடன் பார்த்தேன்.

என் மனைவிக்குக் கவிதைகளைப் படித்து உருகத் தெரியாது. நல்ல படங்களைப் பார்த்து ரசித்து நெகிழத்தெரியாது. ஆனால் என்னை நேசிக்கத் தெரிந்திருக்கிறது!

"என்னங்க? அப்படியே மலைச்சுப் போய் நிக்கறீங்க?"

"இதுபோதும் கண்ணம்மா எனக்கு."

"கண்ணம்மாவா? இது என்னது பட்டிக்காடு மாதிரி. அழகா ஜெயஸ்ரீன்னு கூப்பிடுங்க...!" என்றவளை வாத்சல்யத்துடன் ஏறிட்டேன் முதன் முதலாக.



"என்னது, தம்புராவுக்குப் பதிலா ட்யூப் லைட் வெச்சிண்டு பாடறார்?"

"வீட்லே ட்யூப்லைட் சத்தத்தையே சுருதியா வெச்சிண்டு பாடிப் பழகிட்டாராம். அதனாலேதான்..."



"என்ன சார்! இந்த வயசுல போய், பாட்டுக் கத்துக்கிறீங்க?"

"என்ன செய்யறது? தலை தீபாவளிக்கு வந்த மாப்பிள்ளை, இன்னும் ஊருக்குப் புறப்படாம இருக்காரே!"

— சிவ. சீனிவாசன்.



"இந்த வருஷம் தமிழ்ப் புத்தாண்டுக்கு ஸ்கூல்லே லீவு கிடையாதுடா."

"ஐயையோ, ஏண்டா?"

"அது ஞாயிற்றுக்கிழமை வருதுடா!"



* ஆனத்தூர்: "எங்கள் நெசவுக்கு பாங்க் லோன இல்லையா?"



* ஏ. வி. பாலசுப்பிரமணியன் எம். எல். ஏ.: "ஜாக்கிரதையாகச் செயல்படுகிறேன்..."

# "ஆட்சிக்காரர்கள் தவறு செய்தாலும் விட்டுவிடுவதில்லை!"

**— திருநாவலூர்த் தொகுதி (தி.மு.க.) எம்.எல்.ஏ. ஏ. வி. பாலசுப்ரமணியன் கூறுகிறார்...**

"எனக்கு ஹெர்னியா வந்துவிட்டது. கடலூரிலுள்ள ஒரு டாக்டரிடம் போனேன். 'நீ ஆனத்தூரிலிருந்துதானே வருகிறாய்? அப்படியானால் உனக்குச் சந்தேகமில்லாமல் அந்த வியாதிதான். காரணம், உங்களூர்க் குடிநீர் அப்படி...' என்று சர்வ சாதாரணமாகச் சொன்னார் அந்த டாக்டர். அந்த அளவுக்கு எங்களூர்க் குடிநீர் மோசமாகிவிட்டது. 58 இல் புதைக்கப்பட்ட குழாய்கள், இன்று மண்ணுக்குள் உடைந்து பழுதடைந்து போனதால், குடிநீரோடு என்னென்னவோ கலந்து நோயை உண்டாக்குகிற அளவுக்குக் கெட்டுப் போய்விட்டது!" என்றார் ஆனத்தூரைச் சேர்ந்த இளைஞர் சிவகுமார்.

"குடிநீர் மட்டும்தான் என்பதில்லை. சுமார் அறுநூறு மாணவ, மாணவியர் படிக்கும் எங்களூர் உயர்நிலைப் பள்ளிக்குச் சரியான கட்டட வசதிகூடக் கிடையாது. இருக்கிற கட்டடம் ஆங்காங்கே விரிசல் விட்டுக் கிடப்பதால், மழை பெய்தால் பள்ளிக்கு விடுமுறைதான். மற்ற நேரங்களிலும் ஆசிரியர் தைரியமாக வகுப்பறைகளுக்குள் சென்று பாடம் நடத்தவோ, மாணவ, மாணவியர் பாடம் கேட்கவோ முடியாது. எந்த நேரத்தில் இடிந்து விழுமோ என்கிற நிலையில் எப்படித் தைரியம் வரும்?

"இது ஒருபுறமென்றால், மறுபுறம் எங்களைப் போன்ற நெசவாளர்கள் படும் பாடு. இன்றைக்கு விசைத்தறி வேகமாக வளர்ந்து வருகிறது. அதனால், எங்களைப் போன்ற கைத்தறி நெசவாளர்கள் பாதிக்கப்படுகிறோம். நாங்களும் விசைத்தறிகளைப் போடலாமென்றால், எல்லோருக்கும் கடன் தருகிற வங்கிகள் எங்களுக்குத் தர மறுக்கின்றன. எம். எல். ஏ. விடம் சொல்லலாமென்றால், அவர் இந்தப் பக்கமே வரமாட்டேனென்கிறார். நீங்கள் தான் அவரிடம் சொல்லி ஏதாவது செய்ய வேண்டும்" என்றார் டி. வெங்கட் என்ற இளைஞர்.

சரி. முதலில் பஞ்சாயத்துத் தலைவர் வைத்தியலிங்கம் இவை பற்றி என்ன சொல்கிறார்? "எல்லாவற்றையும் அரசாங்கத்துக்கு எழுதியிருக்கிறோம்" என்கிறார் எந்தவிதச் சலனமுமில்லாமல்! "எங்களூருக்கு இன்னின்ன வேண்டுமென்று யாரிட

மும் எதையும் அழுத்தமாகக் கூறிப் போராட மாட்டார் சார், எங்கள் தலைவர். அதுதான் பிரச்னையே!'' என்றார் துணைத் தலைவர் அருணாசலம்.

எம். எல். ஏ. விடம் சொன்ன போது, ''ஆனத்தூர் பஞ்சாயத்துத் தலைவர் வைத்தியலிங்கம் வேறு யாருமல்ல; எனது சொந்தத் தாய்மாமன்தான் அவர். எங்களுக்குள் சொந்த விஷயமாகக் கொஞ்சம் மனஸ்தாபம். அதனால்தான் எனது பக்கத்து ஊராக இருந்தாலும் நான் ஆனத்தூருக்குச் செல்வதில்லை. மற்றபடி என் வீட்டுக் கதவுகள் எப்போதும் மக்களுக்காகத் திறந்தேதான் இருக்கின்றன. அவர்கள் வந்து என்னிடம் சொன்னால், என்னால் முடிந்த அனைத்தையும் செய்யத் தயாராய் இருக்கிறேன்...'' என்றார் எம். எல். ஏ. வான ஏ. வி. பாலசுப்ரமணியன்.


• வேதுமார்: ''ஆதிராம் தெரிவியா வந்தது''

''சாலையின் நிலை படுமோசமானதால், பண்ருட்டியிலிருந்து எங்களூர் வழியாகச் சேந்தநாட்டுக்குச் சென்று கொண்டிருந்த இரண்டு பஸ்களையும் கடந்த ஒரு மாத காலமாக நிறுத்தி விட்டார்கள். குழந்தைகள் நல்ல பள்ளிகளில் படிக்க வேண்டும் என்பதால், எங்களூரிலுள்ள பலரும் தங்கள் குழந்தைகளைப் பண்ருட்டியிலுள்ள பள்ளிகளில்தான் படிக்க வைக்கிறார்கள். பஸ் இல்லாததால் இப்போது குழந்தைகளெல்லாம் மூன்று கி. மீ. தூரம் நடந்துதான் போக வேண்டியிருக்கிறது. எம். எல். ஏ. வுக்கும் இவையெல்லாம் தெரியும். ஆயினும் பிரச்னைக்குத் தீர்வுதான் ஏற்படவில்லை!'' என்றார் சிவாப்பட்டினத்தைச் சேர்ந்த ரங்கராஜன்.


• வேலாயுதன்: ''என்னை அடித்தார்கள்...''

''உண்மைதான். அந்தச் சாலையும் பரிக்கல் — பெரியசெவலை சாலையும்தான் என்

• அகஸ்தீஸ்வர சுவாமி திருக்கோவில்...





* முத்துராஜா: "எங்களுக்கு இல்லை இலவச வீடுகள்!"

தொகுதியிலேயே மிகவும் மோசமான சாலைகள். உடனடியாகச் சரிசெய்யப்படாமைக்கு நிதி வசதியில்லை என்பதுதான் காரணம். எப்படியிருந்தாலும் அவை சரி செய்யப்பட்டுத்தான் ஆக வேண்டுமென்று நான் நேற்றுக் கூட எக்ஸிக்யூடிவ் இஞ்ஜினியரிடம் பேசினேன். விரைவில் அதற்கான வேலைகள் துவங்குமென்று நம்புகிறேன்!" என்றார் எம். எல். ஏ.

"எங்களூரிலுள்ள அகஸ்தீஸ்வர ஸ்வாமி கோயிலுக்கு இருபத்திரண்டரை ஏக்கர் நிலபுலன்கள் உண்டு. அவையெல்லாம் பரம்பரை தர்மகர்த்தா முறை கொண்டாடும் பழனிவேல்பிள்ளை என்பவரின் ஏக போக்கியத்திலேயே இருந்தன. அண்மையில் அவர் காலமாகி விட்டார். இப்போது அவருடைய மகன்களான ராமசாமி, சுந்தரம், ராஜேந்திரன், சரவணன் ஆகியோரின் அனுபவத்திலேயே உள்ளன. அவர்கள் தங்களிஷ்டத்திற்குக் கோயில் நிலங்களைக் குத்தகைக்கு விடுகிறார்கள். அறநிலையத் துறைக்குக் குறைந்த வருமானத்தையே கணக்குக் காட்டுகிறார்கள். கோயிலுக்கு முன்பிருந்த மண்டபம் பாழடைந்து விழுந்துவிட்டது. அந்த இடத்தையும் இப்போது கொஞ்சம் கொஞ்சமாக விளைநிலமாக்கிக் கொண்டு வருகிறார்கள். கோயில் மதில் சுவரைக் கட்டப் போவதாகச் சொல்லிக் கொண்டிருந்தாலும், அதற்கான வேலைகள் ஏதும் துரிதமாக நடப்பதாகத் தெரியவில்லை. நீங்களே வந்து பாருங்கள்..." என்று அகஸ்தீஸ்வர ஸ்வாமி கோயிலுக்கு அழைத்துச் சென்று காண்பித்தார் சி. மெய்யூரைச் சேர்ந்த லோகநாதன்.

கோயிலுக்குச் சென்றோம். முன் மண்டபமிருந்த பகுதியின் ஓர் ஓரத்தை விளைநிலமாக்கியிருந்தார்கள். கோயில் மிகவும் பாழடைந்த நிலையில்தான் இருந்தது. "இதையெல்லாம் எடுத்துச் சொல்லி, அறநிலையத் துறை ஆணையருக்கு எழுதினோம். சட்டமன்ற ஆய்வுக்குழுவிடம் மனு கொடுத்தோம். பயனில்லை. நான் அப்படிச் செய்ததால் என்னை ஒருநாள் அவர்களுடைய ஆட்கள் அடி அடியென்று அடித்து நொறுக்கியதுதான் நான் கண்ட பலன்..." என்றார் லோகநாதன்.

சரி. மறுதரப்பில் என்ன சொல்கிறார்கள் என்பதை அறிந்து கொள்வதற்காகச் சென்றோம்.

லோகநாதன் கூறிய குற்றச்சாட்டுகள் பற்றிக் கேட்ட போது, "இந்தக் கோயிலைக் கட்டியதே எங்கள் பாட்டனார்தான். இருக்கிற நிலபுலன்களையெல்லாம் அவர்தான் கோயிலுக்கு எழுதி வைத்தார். இந்த நிலையில் மற்றவர்கள் தர்மகர்த்தாவாக வர முயற்சி செய்தால் எப்படி விடுவோம்? இதோ பாருங்கள், எங்களிடம் எல்லாவற்றுக்கும் கணக்கு இருக்கிறது. கோயில் நிலம் 15.21 ஏக்கர்தான். அதற்கான வருமானம் 95 கலம் நெல்லும் (சுமார் 53 மூட்டைகள்) 3,605 ரூபாயும்தான் என்று அறநிலையத் துறையே சர்ட்டிபிகேட் கொடுத்திருக்கிறது பாருங்கள்... இப்போது கூட கோயில் மதில் சுவர் கட்டுவதற்கான ஏற்பாடுகளைச் செய்து கொண்டிருக்கிறோம். எங்கள் சொந்தப் பணத்தைக் கொண்டாவது கட்டியே தீருவோம்..." என்றார் சுந்தரம்.

"சரி. நியாயம் உங்கள் பக்கம் இருக்கும் போது, நீங்கள் லோகநாதனை அடிக்க வேண்டிய அவசியம் என்ன?" — நாம் கேட்டோம்.

"அவன் எங்கள் வீட்டுப் பெண்களைத் தரக்குறைவாகப் பேசினால் சும்மா இருப்போமா? அதனால்தான் அடித்தோம்..." என்றார் சுந்தரம்.

"அவனுக்கும் கோயில் நிலத்தைக் குத்தகைக்குக் கொடுத்திருந்தால் பேசாமல் இருந்திருப்பான். உங்களிடம் புகார் சொல்லி

---




"நான் பிரதம மந்திரியானா ஒரே வாரத்திலே தினம் ஒரு பிரச்னையாத் தீர்த்துடுவேன்... திங்கட்கிழமை, விலைவாசி; செவ்வாய் — காஷ்மீர்; புதன் — பஞ்சாப்; வியாழன் — அஸ்ஸாம்; வெள்ளி — ராமஜென்மபூமி; சனி — மண்டல் கமிஷன்..."

"ஞாயிற்றுக்கிழமை என்ன செய்வீங்க?"

"ரெஸ்ட் எடுத்துக்கிட்டுப் புதிய பிரச்னைகள் உருவாக அவகாசம் கொடுப்பேன்!"

யிருக்க மாட்டான்'' என்றார் சுந்தரத்தின் சகோதரர் ராமசாமி.

நாம் இதுபற்றி எம். எல். ஏ. விடம் சொன்னபோது, ''எனக்கு லோகநாதனையும் தெரியும். அக்குடும்பத்தைப் பற்றியும் தெரியும். அக்குடும்பத்தைச் சேர்ந்த சரவணன் என்பவர்தான் அவ்வூரின் பஞ்சாயத்துத் தலைவர். அக்குடும்பத்தை எதிர்த்து யாருமே அங்கு போட்டி போட முடியாது. அந்த அளவுக்குச் செல்வாக்குள்ள குடும்பம். அறங்காவலர்களை நியமிக்கும் பணி இன்னும் முடிவடையவில்லை. நீங்கள் கூறியவற்றையும் மனத்தில் கொண்டு, மேலும் விசாரித்து நியாயம் எதுவோ அதற்காகப் பாடுபடுகிறேன்'' என்றார் எம். எல். ஏ.

"நீங்கள் 'மாதம் ஒரு மாவட்டம்' என்ற திட்டத்தின் கீழ் எங்கள் திருவெண்ணெய்நல்லூருக்கு வந்தபோது, இங்குள்ள கிருபாபுரீஸ்வரர் கோயிலிலுள்ள நூறு கால் மண்டபம் மாட்டுத்தொழுவமாகி விட்டதாக எழுதியிருந்தீர்கள். இன்றைக்கும் அது அப்படித்தான் இருக்கிறது. கோயில் குளத்தில் ஊரின் சாக்கடை நீர் கலப்பதும் நிற்கவில்லை. இங்குள்ள கிளை நூலகத்தைக் கூட இடவசதியில்லாததால் மாற்றப் போவதாகச் சொல்கிறார்கள். சுந்தரரைத் தடுத்தாட்கொண்ட எங்களூரில் பஸ் ஸ்டாண்ட் வசதி கூட இல்லை. இடுகாட்டு நிலம் மற்றும் மலட்டாற்றுப் படுகைகளையெல்லாம் கொஞ்சம் கொஞ்சமாகத் தனியார்கள் ஆக்கிரமித்துக் கொண்டு வருகிறார்கள். பெண்கள் உயர்நிலைப் பள்ளிக்குக் கட்டட வசதிதான் இல்லையென்பதில்லை. பாவம், அந்தப் பெண்கள் பள்ளியிலிருக்கும் போது, சிறுநீர் கழிக்கும் வசதி கூட இல்லை...'' என்று நம்மைச் சம்பந்தப்பட்ட இடங்களுக்கு அழைத்துச் சென்று காண்பித்தார்கள் அவ்வூரைச் சேர்ந்த இளைஞர் பேரவையைச் சேர்ந்த சில இளைஞர்கள்.

"திருவெண்ணெய்நல்லூரில் சுமார் முந்நூறு ஹரிஜனக் குடும்பங்களுக்கு மேல் இருக்கிறோம். ஆனால், யாருக்கும் இதுவரை அரசாங்கத் திட்டத்தின் கீழ் இலவச வீடுகள் ஏதும் கட்டித் தரப்படவில்லை...'' என்றார் முத்துராஜா என்பவர்.

''உண்மைதான். இந்த ஆண்டில் கூட ஹரிஜனங்களுக்கு இருபது வீடுகள் கட்டித்தர அரசு நிதி ஒதுக்கீடு செய்தது. அதை இவ்வூரின் டவுன் பஞ்சாயத்துத் தலைவர் பயன்படுத்திக் கொள்ளத் தவறியதால் அந்த ஒதுக்கீடு காலாவதியாகி விட்டது. இனி அடுத்த ஒதுக்கீட்டுக்காகக் காத்திருப்பதைத் தவிர வேறு வழியில்லை. பஸ் ஸ்டாண்ட் பற்றியும் டவுன் பஞ்சாயத்துத் தலைவர்தான் முடிவு செய்ய வேண்டும். காரணம், இது டவுன் பஞ்சாயத்து என்பதால், இதற்கான நிதி ஒதுக்கீடே தனி. எம். எல். ஏ. என்கிற



''பழைய சினிமாப் பாட்டுங்களையெல்லாம் போட்டுக் கேட்டுக்கிட்டிருக்கீங்களே, என்ன விஷயம்?''

''என்னோட அடுத்த படத்துக்கு ஒரு 'டைட்டில்' செலக்ட் பண்ணத்தான்!''

— சீர்காழி வி. ரேவதி.

முறையில் மட்டுமல்ல; சேர்மன் என்கிற முறையிலும் நான் எதுவும் செய்ய முடியாது. நூறு கால் மண்டபம் பற்றிச் சொன்னீர்கள். அதைச் சுத்தப்படுத்தி வழக்காடு மன்றமாக உபயோகிக்கும்படி செய்ய ஆறு லட்சரூபாய் நிதி ஒதுக்கப்பட்டுள்ளது. நான்தான் திருப்பணிக்குத் தலைவர். விரைவில் அவ்வேலை துவங்கப்பட்டுவிடும். கிளை நூலகத்துக்கான இடம் தருவதாக டவுன் பஞ்சாயத்தில் சொல்லியிருக்கிறார்கள். அப்படித் தரவில்லையானால்தான் பிறகு அதுபற்றி யோசிக்க வேண்டும். ஆக்கிரமிப்பு பற்றிச் சொன்னீர்கள். இது அங்கு மட்டுமல்ல, நிறைய இடங்களில் நடந்து கொண்டிருக்கிறது என்பதை நானும் அறிவேன். ஓரிடத்தில் கர்ணமாக இருப்பவரே ஐந்து ஏக்கர் நிலத்தை ஆக்கிரமிப்புச் செய்திருக்கிறார் என்றால் என்னவென்று சொல்வது? சட்டங்களைக் கடுமையாக்காமல் இந்த ஆக்கிரமிப்புக்களை அவ்வளவு சுலபமாக அகற்றிவிட முடியாது...'' என்றார் எம். எல். ஏ.

''ஆனத்தூரிலுள்ள தாய் – சேய் நல விடுதிக் கட்டடம் கட்டப்பட்டுப் பத்துப் பதினைந்து ஆண்டுகள் கூட ஆகியிருக்காது. இந்த நிலையில் அக்கட்டடம் விரிசலடைந்து போனதால் விடுதியையே வேறு இடத்திற்கு மாற்றியிருக்கிறார்கள்...''

''ஆமாம். என்னதான் கண்காணிப்புச் செய்தாலும் காண்ட்ராக்டர்கள் ஏமாற்றி விடுகிறார்கள். அப்படி ஏமாற்றுகிற காண்ட்ராக்டரைத் தண்டிக்கச் சட்டத்தில் ஏதும் வழியில்லையே! அப்படிப் பல கட்டடங்கள் இருக்கின்றன. இப்போது நாம் உட்கார்ந்திருக்கிற திருநாவலூர் யூனியன் அலுவலகக் கட்டடமே விரிசல் கண்டுதான் இருக்கிறது பாருங்கள்...''

''உங்கள் தொகுதியில், உங்கள் கட்சிக்காரர்கள் தேவையில்லாமல் வசூல் செய்வ

தாகச் சொல்கிறார்கள்...''

''குறிப்பாகப் பெயர் சொல்லுங்கள். உடனடியாக நான் நடவடிக்கை எடுக்கிறேன். எதிர்காலத்தில் யாரும் அப்படிச் செய்தால் நடவடிக்கை எடுக்கவும் காத்திருக்கிறேன்.''

''திருவெண்ணெய் நல்லூரில், செல்வம் என்ற தி. மு. க. காரர், வங்கியில் கடன் கேட்டுத் தராததால், வங்கி மானேஜரை அவர், 'செருப்பால் அடிப்பேன்' என்று தரக்குறைவாகப் பேசி மிரட்டினாராமே?''

''செல்வம் என்பவர் அப்படிப் பேசியது உண்மைதான். எங்கள் கட்சிக்காரர் என்பதால் நான் ஒன்றும் கண்டுகொள்ளாமல் விட்டுவிடவில்லை. எனக்குத் தகவல் தெரிந்ததும் நான் அவரைக் கூப்பிட்டுக் கடுமையாக எச்சரிக்கை செய்தேன்.''

''பல இடங்களில் ரேஷன் கடைகளில் விலைகளை உயர்த்தி விற்பதாகச் சொல்கிறார்களே...''

''உண்மைதான். நானே சில இடங்களில் அவற்றைக் கண்டுபிடித்து நடவடிக்கை எடுத்திருக்கிறேன். அரசாங்கத்திற்குக் கெட்ட பெயர் வாங்கித் தருபவர்களும் இவர்கள்தான். நான் அவர்கள் மீது கருணை காட்டுவதே இல்லை. அதில் ஒரு வேடிக்கை என்னவென்றால், ஒருவர் தவறு செய்துவிட்டார் என்று வேறொருவரை நியமித்தால், அவரும் அதையேதான் செய்கிறார். என்ன செய்வதென்றே புரியவில்லை!''

''உங்கள் தொகுதிக்கு என்னென்ன செய்தால், தொகுதி வளர்ச்சியடையுமென்று பாடுபடுகிறீர்கள்?''

''இங்கே ஏழெட்டுக் கரும்பாலைகள் உள்ளதால், காகிதம் தயாரிப்பதற்கான முக்கிய மூலப் பொருளாக இருக்கும் கரும்புச் சக்கை நிறையக் கிடைக்கிறது. அதனால் காகித ஆலையொன்று வேண்டுமென்று முதல்வரிடம் சொல்லியிருக்கிறேன். சாத்தனூர் அணை நீரின் எழுபத்தைந்து சதம் என் தொகுதியில்தான் பாய்கிறது என்றாலும் நீர் வரும் ராகவன் வாய்க்கால் தூர்ந்து கிடக்கிறது. அதைச் சுத்தப்படுத்த வேண்டும். எனது முயற்சியால் 310 லட்சம் செலவில் துணை மின் நிலையம் ஒன்றை அரசூரில் அமைக்கும் வேலையை அரசு மேற்கொண்டுள்ளது. அப்புறம், ஜாதிப் பிரச்னை. இங்கு பெரும்பான்மையாக இருப்பவர்கள் வன்னியர்கள். மற்றவர்கள் சிறுபான்மையினராக இருப்பதால், சிறுபான்மையினருக்குப் பெரும்பான்மையோரிடம் ஏற்படுகிற இயல்பான சந்தேகங்கள்... இவற்றுக்கு இடையில் பெரும்பான்மை ஜாதியைச் சேர்ந்த நான், எப்படியெல்லாம் அதி ஜாக்கிரதையாகச் செயல்பட வேண்டுமோ, அப்படித்தான் செயல்பட்டுக் கொண்டிருக்கிறேன். எதிர்காலத்திலும் செயல்படுவேன் என்று உறுதியளிக்கிறேன்!'' என்றார் எம். எல். ஏ. பாலசுப்ரமணியன்.

**— இளங்கோவன்.**

வண்ணப்படங்களும், படங்களும்:
**சுபா.**

# ஒரே கதைக்கு 32 முடிவுகள்!



●● கோடக் நிறுவனம் புதுமையான வீடியோ கேசட்டை வெளியிட்டுள்ளது. புகழ்பெற்ற அமெரிக்க எழுத்தாளர் ஐஸக் அஸிமோவின் விஞ்ஞானக் கதை அடிப்படையில் இந்த கேசட் தயாரிக்கப்பட்டுள்ளது. இதில் உள்ள கதைக்கு 32 விதமான முடிவுகள் உள்ளன! பொத்தான்களை அமுக்குவதன் மூலம், ரசிகர்கள் தங்களுக்கு விருப்பமான முடிவைத் தேர்ந்தெடுத்து ரசிக்க முடியும்!

''க்ளூ' எனப்படும் மற்றொரு கேசட்டும் பரபரப்பாக விற்பனையாகிறது. இது ஒரு கொலை சம்பந்தப்பட்ட மர்மக் கதையாகும். கொலையாளி யார் என்பதைப் பார்வையாளர்களே நிர்ணயித்து, அதற்கேற்ப பொத்தான்களை இயக்கலாம். அதற்கு ஏற்றபடி கதையின் காட்சிகள் மாறுகின்றன! ஒவ்வொரு முறையும் ஒவ்வொரு முடிவு வரும் வகையில் அமைக்கப்பட்டுள்ளது.

— அமெரிக்கத் தகவல் நிலையம்.

●● டெலிவிஷன் மூலம் 'ஷாப்பிங்' செய்யும் வசதி அமெரிக்காவில் துவக்கப்பட்டுள்ளது. குறிப்பிட்ட அலைவரிசையைத் திருப்பினால், பல்வேறு விதமான பொருட்கள் பற்றிய விவரங்களும் அவற்றின் விலைகள் பற்றிய தகவல் குறிப்புகளும் ஒளிபரப்பாகும். பொதுமக்கள் தங்களுக்கு வேண்டிய பொருட்களைத் தேர்ந்தெடுத்து, தொலைபேசி மூலமாக 'ஆர்டர்' கொடுக்கலாம். அவற்றையெல்லாம் வீட்டிலேயே கொண்டு வந்து டெலிவரி செய்து விடுகிறார்கள்!

— அமெரிக்கத் தகவல் நிலையம்.

●● முப்பத்தைந்து வருடங்களாக நடந்து வந்த வழக்கு டெல்லி விசேஷ நீதிமன்றத்தில் சமீபத்தில் முடிவடைந்தது.

மத்தியப் பிரதேச அரசுக்குச் சொந்தமான சாலைப் போக்குவரத்துக் கழகத்தில் வேலை பார்த்த நான்கு பேர் பதினெட்டாயிரம் ரூபாயைக் கையாடல் செய்ததாகத் தொடரப்பட்ட இவ்வழக்கில் அரசாங்கம் செய்த செலவு ஒரு கோடி ரூபாய்! நாலு பேரையும் குற்றமற்றவர்கள் என்று தீர்ப்பு வழங்கிய நீதிபதி, மக்களின் பணமும் நேரமும் மிகப் பெரிய அளவில் வீணடிக்கப்பட்டுள்ளதாகக் கூறினார்.

— வி. ந. ஸ்ரீதரன்.

ஆதாரம்: 'டைம்ஸ் ஆஃப் இந்தியா'

# அர்ஜுன் போடும் கண்டிஷன்!

●● தமிழ்ப்படவுலகுக்கு 'இதயம்' படத்தின் மூலம் இன்னொரு கதாநாயகி இறக்குமதியாகிறார் — விளம்பரத்துறையிலிருந்து. பெயர்: ஹீரா ராஜகோபால். மாடலிங்கில் மட்டுமே கவனம் செலுத்தி வந்த இவர், இதுவரை சினிமாப் பிரவேசம் பற்றிய சிந்தனையே இல்லாமல்தான் இருந்தார். சொல்லப் போனால், வந்த வாய்ப்புக்களைக் கூட மறுத்து வந்தாராம். ஆனால், இதயம் படத்தின் டைரக்டர் கதிரும், தயாரிப்பாளர் தியாகராஜனும் வந்து படத்தின் கதையைச் சொல்லி நடிக்க அழைத்த போது தட்ட முடியவில்லையாம்! என்ன காரணம்? "வழக்கமான காதல் கதைதான் என்றாலும், அது சொல்லப்படுகிற விதம் வித்தியாசமானது; அதுதான்!" என்கிறார் சந்தோஷத்தோடு!

●● அர்ஜுன் என்றாலே சண்டைக் காட்சிகள்தான் என்கிற நிலை எத்தனை நாளைக்குத்தான் தாக்குப் பிடிக்கும்? தெலுங்கில் சுத்தமாகத் தாக்குப் பிடிக்காமல் போனது. இப்போது தமிழை மட்டும்தான் நம்பிக் கொண்டிருக்கிறார் அர்ஜுன். இங்கும் அந்த நிலை வந்துவிடக் கூடாதே என்கிற முன்னெச்சரிக்கையில், படத்தின் கதையைக் கேட்டுத் தெரிந்து கொண்டு தான் ஒப்புக் கொள்கிறார். "ஆக்ஷனை விட என்னுடைய ஆக்டிங் தான் பளிச்



* ஹீரா ராஜகோபால்: விளம்பரங்களிலிருந்து இறக்குமதி...

சென்று தெரிய வேண்டும்!' என்றும் கண்டிஷன் போடுகிறாராம்!

●● 'என்னருகில் நீயிருந்தால்' படத்தின் மூலம் ஒரு செண்டிமெண்டல் கணக்கோடு தமிழுக்கு வந்திருப்பவர் குரு. பிரபல கன்னடப் பாடலாசிரியரும் வசனகர்த்தாவுமான உதயசங்கரின் மகனான இவர், கன்னடத்திலிருந்து தமிழுக்கு வந்துள்ள ரஜினி, மோகன், மற்றும் சேனடி கண்மணி ரமேஷ், அரவிந்த் ஆகியோர் பிரபலமான மாதிரி கன்னடத்திலிருந்து வரும் தமக்கும் ஒரு வாய்ப்புக் காத்திருக்கிறது என்று பலமாக நம்புகிறார்.



●● 'ஓஹோ'வென்றிருந்த ராமராஜன் இப்போது இறங்கு முகத்தில்தான் இருக்கிறார். ஒப்பந்தமான சில தயாரிப்பாளர்கள் கூட சப்தமின்றி நழுவி விட்டார்கள். இன்னும் சிலவற்றைத் தாமாகவே விலக்கி விட்டு, இப்போது இரண்டு மூன்று படங்களில் மட்டுமே தீவிர கவனம் செலுத்துகிறார். தமது உதவியாளராயிருந்த ராமதிலக ராஜன் இயக்கிய 'நாடு அதை நாடு'வில் ரொம்பவும் நம்பிக்கையோடு நடித்திருக்கிறார். அந்தப் படத்தில் வரும் ஒரு பாடல் காட்சிக்காக என்ன செய்தார்கள் தெரியுமா? படப்பிடிப்பு நடந்த பொள்ளாச்சிப் பகுதியிலிருந்த அத்தனை தச்சுத் தொழிலாளர்களையும் அழைத்து, 1200 ஏர்க்கலப்பைகள் செய்யச் சொல்லி, 1200 விவசாயிகளை அழைத்துத் தோளில் சுமந்து கொண்டு நடக்கச் சொல்லிக் காட்சியில் சேர்த்தார்களாம்! சிரமம் பலன் தருமா?

தொகுப்பு:

**எஸ். பாலு, நிகிலா ராஜா.**



* அர்ஜுன்: புதிய கண்டிஷன்!

# சன்னாசி பள்ளிக்கூடம் போகிறான்!

"அம்மா! ஸ்கூலுக்கு நேரமாச்சி. நான் போய்ட்டு வர்றேன்."

சன்னாசி நீண்ட நாட்களாய்த் தொட்டுக் கூடப் பார்க்காது கிடந்த புத்தகங்களைத் தூசு தட்டி... ஒரு பழைய நைலான் சாக்குப் பையில் வைத்து... மதியம் சத்துணவு சாப்பிட, ஓர் அலுமினியத் தட்டையும் அதற்குள் திணித்துக் கொண்டு அவசரமாய் வாசலுக்கு வந்தான்.

ஏறத்தாழ ஒரு வருஷமாய்ப் பாதியில் விட்டுப் போன பள்ளிப் படிப்பை, இன்று முதல் தொடரப் போகிறோம் என்கிற பெருமிதம் அவன் முகத்தில் நிரம்பியிருந்தது.

"சன்னாசி. வீட்ல சுத்தமா மொளகாய் இல்லே. ஒரே ஓட்டமா ஓடிப் போய், ஒரு நாலணாக் காசுக்கு மொளகாய் வாங்கிக் கொடுத்துட்டுப் போயேன்..."

உள்ளே இருந்தபடி அவன் தாய் வடிவாம்பாள் குரல் கொடுத்தாள்.

"இல்லேம்மா... நேரமாச்சி. சாரு ஏசுவாரு..." என்றபடி ஓட்டமும் நடையுமாக விரைந்தான் சன்னாசி.

கீற்று எல்லாம் நைந்து போன கூரைக் கட்டடம். எந்தக் காலத்திலோ எழுதப் பட்டுத் துருவேறிப் பாதி அழிந்த நிலையில்... 'ஊராட்சி ஒன்றியத் தொடக்கப் பள்ளி' என்ற போர்டு.

மாணவர்கள் யாவரும் பள்ளியின் முன் புறத்திடலில் காலை பிரேயருக்காக வந்து நின்றனர்.

சன்னாசி அவசரமாய் ஓடிப் போய் ஐந்தாம் வகுப்பு வரிசையில் கடைசியாய் நின்று கொண்டான்.

சன்னாசியை நீண்ட நாளைக்குப் பிறகு, மாணவர்கள் வேடிக்கை பார்ப்பது போலப் பார்த்ததும், 'ச்சே! அம்மா பேச்சைக் கேட்டுட்டு ஒரு வருஷத்துப் படிப்பையே வயல் வேலைக்குப் போய்க் கெடுத்துக் கொண்டோமே...' என்று தன் மனத்திற்குள் நொந்து கொண்டான்.

பிரேயர் முடிந்து வகுப்புக்குள் வந்ததும்,

"அம்பிகாபதி..." என்று ஆசிரியர் வருகைப் பதிவேட்டை விரித்து வருகைப் பதிவிற்காகப் பெயர் கூப்பிட்டார்.

"வந்திருக்கான் சார்!" என்றான் இன்னொரு மாணவன்.

"வந்திருக்கான் என்றால் என்னடா அர்த்தம்? ஆள் எங்கே...?" ஆசிரியர் குரலில் கோபம் தொனித்தது.

"சார்... அவன் நாலாவது சாருக்கு மை வாங்கப் போயிருக்கான் சார்..."

"சரி... அழகுசுந்தரம்" — ஆசிரியர் அடுத்த பெயரைக் கூப்பிட்டார்.

"அவன் சத்துணவிற்கு விறகு வாங்கப் போயிருக்கான் சார்."

"அப்துல் ஹமீது..."

"மூன்றாவது சார்... போஸ்ட் ஆபீசுக்கு அனுப்பி இருக்கார் சார்..."

ஐந்தாவது வகுப்பு ஆசிரியருக்குக் கோபம் கோபமாக வந்தது. வகுப்பில் இருந்த மூன்று பெரிய பையன்களையும் மற்றவர்களே பயன்படுத்திக் கொண்ட கோபம் அது.

காலையில் வீட்டை விட்டு அவர் பள்ளிக்குப் புறப்படும் போது, மனைவி கண்டிப்பாய்க் கூறியது நினைவிற்கு வந்தது.

"வீட்ல ஒரு சொட்டுக் கூட கெரசின் இல்லே. வந்தாத்தான் சமைக்க முடியும்..."

'யாரை அனுப்பலாம்?' என்ற யோசனையில் வகுப்பை ஒரு நோட்டம் விட்டார்.

சன்னாசியைக் கடைசி பெஞ்சில் பார்த்ததும் அவர் முகம் மலர்ந்தது.

"யாருடா... சன்னாசியா? ஆச்சரியமா இருக்கு... இவ்வளவு நாள் எங்கேடா போயிருந்தே...?"

ஆசிரியர் அடிக்கப் போகிறார் என்ற பயத்துடன், "இல்லே சார்... இனிமே... தொடர்ந்து தவறாம வந்துடுவேன் சார்... சார்..." என்று பயந்தபடியே மெல்லக் கூறினான் சன்னாசி.

"சரி... நம்ம வீடு தெரியுமில்லே... வீட்டுக்குப் போய்க் குடும்பக் கார்டும் ஒரு கேனும் வாங்கிக்கிட்டு ரேஷன் கடைக்குப் போய்க் கெரசின் மட்டும் வாங்கிக் கொடுத்துட்டு வந்துடு..."

ஆசிரியர் அடிக்கப் போகிறார் என்று பயந்த சன்னாசி, பயம் நீங்கி, "சரி சார்" என்றபடி ஓடினான்.

அவர் வீட்டுக்குப் போய்க் கார்டும் — கேனும் வாங்கிக் கொண்டு சென்ற போது, அங்கே ஒரு நீண்ட க்யூ நின்றிருந்தது. எப்படியோ முட்டி மோதி, மண்ணெண்ணெய் வாங்கிக் கொடுத்துவிட்டு வந்தபோது, இரண்டு பீரியட் வகுப்பு முடிந்து இண்டர்வெல் விட்டிருந்தார்கள்.

மூன்றாவது பீரியட் கணக்கு வகுப்பு.

**கமலா கந்தசாமி**

கணக்குக்கு வரும் ஆசிரியருக்குச் சரியாய்ப் பதினோரு மணிக்கு டீ, ஒரு சிகரெட் அவசியம் வேண்டும்:

''யாரு சன்னாசியா? வா... ஒரு டீ வாங்கிக்கிட்டு வா...''

சன்னாசி டீ வாங்கி வந்து கொடுத்து விட்டு, டீ கிளாசை மறுபடியும் கடையில் கொடுத்துத் திரும்பிய போது, முன்புற வராந்தாவில் இருந்த ஒன்றாவது வகுப்பு ஆசிரியர், ''தம்பி... கடைக்கா? எனக்கு இருபது காசுக்கு வெத்திலை சீவல்...'' என்றார்.

சன்னாசி மறுபடியும் கடைக்கு ஓடி, வெற்றிலை சீவல் வாங்கி வந்து கொடுக்கும் போது, மூன்றாவது பீரியட் முடிந்து நான்காவது பீரியட் ஆரம்பமானது. அது தான் கடைசி பீரியட். இதிலாவது ஏதாவது படிக்கலாம் என்று மகிழ்ந்து போன சன்னாசியின் எண்ணத்தைக் கலைப்பது போல...

**"சா**ர்... இன்றைக்கு முட்டை போடுகிற நாள். ஏறத்தாழ இருநூறு முட்டை. எல்லாம் அவிச்சி ரெடியா இருக்கு. ஓடு நீக்கி, உரித்துத் தட்டுல அடுக்கணும். யாராவது இரண்டு பெரிய பையன்களை அனுப்புங்க சார்...'' என்றார் சத்துணவு அமைப்பாளர்.

''ராமசாமி... சன்னாசி, நீங்க ரெண்டு பேரும் போங்க...''

**ம**னத்தில் ஏக்கத்துடன் சமையல் அறைக்குள் நுழைந்தான் சன்னாசி. உடைந்து போகாமல் மெதுவாய்க் கீழே ஒரு தட்டுத் தட்டி... கவனமாய் ஓடு நீக்கி எல்லா முட்டைகளையும் உரித்து அடுக்கிய போது மதிய உணவு இடைவேளை விடப்பட்டது.

முட்டைக்காக அடித்து மோதிக் கொண்ட மாணவர்களை அதட்டி உட்கார வைத்துவிட்டு, அமைப்பாளர் ''தம்பி... நீயே தட்டுக்கு ஒண்ணு போட்டுட்டு வந்துடு...'' என்று சன்னாசியிடம் கூறினார்.

முட்டை பரிமாறி, அவனும் சாப்பிட்டு, பிறகு இருநூறு பேர் சாப்பிட்ட இடத்தைக் கூட்டிச் சுத்தம் செய்து முடித்த போது, சரியாய் மணி இரண்டு.

**பி**ற்பகல்பள்ளி ஆரம்பமாகியது. வகுப்பிற்குள் நுழைந்தான் சன்னாசி. அது அறிவியல் வகுப்பு. அறிவியல் டீச்சர் தமது இரண்டு வயதுச் சுட்டிப் பையையும் வகுப்புக்குக் கையோடு கொண்டு வந்திருந்தார்.



''எல்லோரும் அறிவியல் புக்கை எடுத்துக்குங்க...'' என்று டீச்சர் சொன்னதுதான் தாமதம், மேஜை மீது உட்கார்ந்திருந்த டீச்சரின் குட்டிப் பையன், ''அம்மா... முத்தாய்... அம்மா முத்தாய்'' என்று மிட்டாய் கேட்டு அடம் பிடித்து அழ ஆரம்பித்தான்.

''சன்னாசி இங்கே வா... இவனைக் கடையில அழைச்சுக்கிட்டுப் போய் இரண்டு மிட்டாய் வாங்கிக் கொடுத்து... அப்படியே வீட்ல கொண்டு போய்... அவன் பாட்டி இருப்பாங்க... விட்டுட்டு வந்துடு...''

மறுக்க முடியாத சன்னாசி சமர்த்தாய் அந்த முரட்டுப் பையனை இடுப்பில் தூக்கி, அழாமல் விளையாட்டுக் காட்டி... மிட்டாய் வாங்கிக் கொடுத்து, வீட்டில் கொண்டு போய் விட்டுவிட்டு வந்தபோது பிற்பகல் இரண்டாவது பீரியட் ஆரம்பமாகி இருந்தது.

ஆனால் அந்த வகுப்புக்கு வரவேண்டிய ஆசிரியர் அன்று லீவு என்பதால் வகுப்புக்கு யாருமே வரவில்லை.

சரி, கடைசி பீரியட்... ஐந்தாவது வகுப்பு ஆசிரியரும் அந்தப் பள்ளியுடைய தலைமை ஆசிரியரும்தான்.

''நிச்சயம் அவராவது பாடம் நடத்துவார்'' என்ற நம்பிக்கையுடன் சன்னாசி காத்திருக்க, அவரோ நான்காவது வகுப்பு ஆசிரியர் ஒருவரை அழைத்துப் பேசிக் கொண்டிருந்தார்.

''சார்... ஹெட்மாஸ்டர் ஸ்கேல் அரியர்ஸ் பணம் இன்னைக்கு வருது. நான் ஆபீஸ் போய் வாங்கிக்கிட்டு வந்துடறேன்...'' என்றார்.

''ஏகப்பட்ட பணம் வருமே... என்ன செய்யப் போறீங்க...?'' என்றார் நான்காவது வகுப்பு ஆசிரியர்.

''இருபது ரூபாய் வரும். கொஞ்சம் நிலம் பேசி இருக்கேன்...'' ஹெட்மாஸ்டரின் முகத்தில் மகிழ்ச்சி நிலவியது.

கடைசி பீரியடில் விளையாட விடப்பட்டார்கள். அது முடிந்து ஒரு வழியாய்ப் பள்ளி விட்டதும்... பையை எடுத்துக் கொண்டு சன்னாசி புறப்பட்டான்.

'ச்சே! இதுக்குத்தானா பள்ளிக்கு வந்தோம்! நிச்சயம் இந்தப் பள்ளிக்கூடத்துல பெரிய பையன் என்பதால் நம்மை எடுபிடியாய்த்தான் பயன்படுத்துவார்கள்' என்று சன்னாசிக்குப் புரிந்தது.

'இதற்கு வயல் வேலைக்குப் போனால் கூட நாலு காசு சம்பாதிக்கலாம். அம்மாவுக்கு உதவியாய் இருக்கும்...' என்று மனத்தில் தீர்மானம் உறுதியாகி விட, கோபமாய்ப் பக்கத்து வாய்க்காலில் பையைத் தூக்கி வீசி விட்டுக் கைகளை வீசியபடி வீட்டுக்கு நடந்தான் சன்னாசி!

---

# ''டிரிங்கோமேனியா''

பெங்களூரில் நடந்த அனைத்துக் கல்லூரி கலைவிழாவில் ஒரு போட்டி 'டிரிங்கோமேனியா.' முதல் சுற்றில் இருபது மாணவர்கள் கலந்து கொண்டனர். ஒவ்வொருவர் முன்பாகவும் நான்கு கிளாஸ்களில் குடிதண்ணீர் வைக்கப்பட்டது. அதற்குப் பக்கத்தில் இரண்டு கிளாஸ் உப்புத் தண்ணீர். ''ஸ்டார்ட்'' சொன்னதும் ஆறு டம்ளர் தண்ணீரையும் குடித்துக் காலி செய்ய வேண்டும். இதில் பிறரைத் தோற்கடித்த முதல் நான்கு பேர் மட்டுமே இறுதி ரவுண்டில் பங்கேற்றனர்.

நான்கு பேரிடமும் ஐந்து ஐந்து ஸ்டிராக்கள் தரப்பட்டன. ஒரு ஸ்டிராவின் இறுதியில் இன்னொரு ஸ்டிராவை நுழைத்து, ஐந்து ஸ்டிராக்களையும் இணைத்து நீண்டதொரு ஸ்டிராவைத் தயாரித்து, அதனை லெஹர் பெப்சி பாட்டிலினுள் நுழைத்து, உறிஞ்சிக் குடிக்க வேண்டும். இவ்வாறே மேலும் இரண்டு பெப்சி பாட்டில்களைக் காலி செய்ய வேண்டும். யார் முதலில் முடிக்கிறாரோ அவருக்கு முதல் பரிசு!

இருபது பேரில் முதலாவதாக வந்து வெற்றிப் பரிசைத் தட்டிக் கொண்டு போனவர், படத்தில் உள்ள விவேகானந்தா கல்லூரி பி. காம். மாணவர் ரகுராம்.



தகவல்: மௌஷ்மி
படம்: யோகா

# சிவகாமியின் சபதம்

அமரர் கல்கி



இரண்டாம் பாகம்

காஞ்சி முற்றுகை

### முதல் அத்தியாயம்

## வடக்கு வாசல்

கார் காலத்தில் ஒருநாள் மாலை காஞ்சிமாநகரின் கோட்டை கொத்தளங்களுக்குப் பின்னால் சூரியன் இறங்க, வடகிழக்குத் திசையில் குமுறிக் கொண்டிருந்த மேகங்களின் தங்க விளிம்புகள் வர வர ஒளி குன்றி வந்தன. செங்கதிர்த் தேவன் தன் கடைசித் தங்கக் கிரணத்தையும் சுருக்கிக் கொண்டு மறையவே, வான முகில்கள் நீல நிறத்தை அடைந்து, திருமாலின் மேனி வண்ணத்தை நினைவூட்டின.

வடகிழக்குத் திசையிலிருந்து விர்ரென்று அடித்துக் கொண்டிருந்த வாடைக் காற்றின் சிலுசிலுப்பினால் மரங்களும் கொடிகளுங் கூட நடுங்குவதாகத் தோன்றியது.

காஞ்சிமா நகரத்துக் கோட்டை மதில்களிலும், கோவில் கோபுரங்களிலும், அரண்மனை விமானங்களிலும், கலை மண்டபங்களிலும் குடியேறி வாழ்ந்த பலவகைப் பறவைகள் சடசடவென்று இறக்கைகளை அடித்துக் கொண்டு தத்தம் வாசஸ்தலத்தை நோக்கிப் பறந்து கொண்டிருந்தன.

அந்த மனோரம்யமான அந்திப் பொழுதில் காஞ்சிக் கோட்டையின் விசாலமான வடக்கு வாசல் அமைதி குடிகொண்டு விளங்கிற்று.

எட்டு மாதத்துக்கு முன்னால் மகேந்திர சக்கரவர்த்தி அந்தக் கோட்டை வாசல் வழியாகப் போர்க்களத்துக்குப் பிரயாணமான பின்னர், அவ்வாசலின் பெருங்கதவுகள் திறக்கப்படவில்லை. உட்புறத்தில் கனமான எஃகுச் சட்டங்களினால் அவை தாழிடப்பட்டுப் பெரிய பூட்டுகளினால் பூட்டப்பட்டிருந்தன.

வாசலின் வெளிப்புறத்தில் காவலர்கள் இருவர் கையில் வேலுடனும் இடையில் வாளுடனும் நின்று காவல் புரிந்தார்கள். ஒவ்வொருவருடைய கழுத்திலும் ஊதும் கொம்பு ஒன்று தொங்கியது. கோட்டை வாசலிலிருந்து புறப்பட்ட விசாலமான இராஜபாட்டையானது அங்கிருந்து வெகு தூரம் வரையில் வளைந்தும் நெளிந்தும் ஊர்ந்தும் செல்லும் பாம்பைப் போல் காணப்பட்டது.

அந்தப் பாதையில் கண்ணுக்கெட்டிய தூரத்துக்கு ஒருவரும் காணப்படவில்லையாயினும் காவலர்கள் இருவரும் சாலையைக் கூர்ந்து கவனித்துக் கொண்டிருப்பதைப் பார்த்தால், யாரையோ அவர்கள் எதிர்பார்த்துக் கொண்டிருந்தது போல் தோன்றியது.

திடீரென்று வெகு தூரத்தில் புகைப்படலம் போன்ற புழுதி எழுந்தது. குதிரைகளின் பாய்ச்சல் சப்தம் கேட்டது. காவலர்கள் இருவரும் ஜாக்கிரதையாக நின்றார்கள்.

கோட்டை வாசலின் மேல் மாடத்தில் எச்சரிக்கை முரசு 'திண் திண்' என்று சப்திக்கத் தொடங்கியது.

புழுதிப்படலமும், குதிரைகள் வரும் சப்தமும் அதிவிரைவில் நெருங்கி வந்து விட்டன. மங்கலான மாலை வெளிச்சத்தில் குதிரைகளும் கண்ணுக்குப் புலனாயின.

முன்னால் வந்த இரண்டு குதிரைகளின் மேலிருந்த வீரர்கள் கையில் ரிஷபக் கொடி பிடித்துக் கொண்டிருந்தார்கள்.

அவர்களுக்கு அடுத்தாற்போல் தனித்து வந்த உயர்ந்த சாதிக் குதிரைகளின் மீது போர்க்கோலம் பூண்ட கம்பீரத் தோற்றமுடைய ஒரு யௌவன புருஷன் வீற்றிருந்தான். இன்னும் சில குதிரைகள் கொஞ்சம் தள்ளிப் பின்னால் வந்தன.

கோட்டை வாசலுக்குச் சற்று அப்பால், அகழிப் பாலத்தின் அக்கரையில் எல்லாக் குதிரைகளும் நின்றன.

முன்னால் கொடி பிடித்து வந்த இருவரில் ஒருவன், ''காஞ்சிமா நகர்க் கோட்டையின் வீர தளபதி பரஞ்சோதியார் வருகிறார்! கோட்டைக் கதவைத் திறவுங்கள்!'' என்று கூவினான். இன்னொருவனும் அவ்வாறே திரும்பக் கூவினான்.

''தளபதி பரஞ்சோதி வாழ்க! வாழ்க!'' என்று பற்பல குரல்கள் சேர்ந்து கோஷித்தன.

கோட்டைக் காவலர் இருவரும் விரைவாக நடந்து முன்னால் வந்தார்கள். தனித்து நின்ற உயர்சாதிக் குதிரை மீதிருந்த வீரனை அவர்கள் அணுகி வணக்கத்துடன் நின்றார்கள்.

ஆம்; அந்தக் கம்பீரமான கறுத்த குதிரை மீது வீற்றிருந்த வீரன் நம் பழைய நண்பனான பரஞ்சோதிதான்!

# மூன்று சாம்ராஜ்யங்கள்




"சிவகாமியின் சபதம்" நிகழ்ந்த காலத்தில் பாரத நாட்டின் அரசியல் நிலைமை...

எட்டு மாத காலத்திற்குள்ளே அவனிடம் காணப்பட்ட மாறுதலானது மிக்க அதிசய மாயிருந்தது.

காஞ்சியில் பிரவேசிக்கும் போது அவன் உலகமறியாத பாலகனாயிருந்தான். அவனுடைய முகமானது பால்வடியும் குழந்தை முகமாயிருந்தது. இப்போதோ அந்த முகத்தில் எத்தனையோ போர்முனைகளில் முன்னணியில் நின்று போரிட்டதன் அடையாளங்களான பல காயங்களுடன், உலக அநுபவத்தினால் ஏற்படும் முதிர்ச்சியும் காணப்பட்டது. எனவே நாமும் தளபதி பரஞ்சோதிக்குரிய கௌரவத்தை அளித்து அவரை மரியாதையுடன் குறிப்பிட வேண்டியவர்களாகிறோம்.

கோட்டைக் காவலர்கள் தளபதியை அணுகிப் பயபக்தியுடன் நின்றபோது அவர் மிக்க பெருமிதத்துடனே கையில் ஆயத்தமாய் வைத்திருந்த சிங்க இலச்சினையை எடுத்துக் காட்டினார்.

அதைப் பார்த்த வீரர்கள் மறுபடியும் தளபதி பரஞ்சோதிக்கு வணக்கம் செலுத்தி விட்டுத் திரும்பிச் சென்று, அகழியின் பாலத்தை நெருங்கியதும், தங்கள் தோளில் தொங்கிய கொம்பு எடுத்து, 'பூம்' 'பூம்' என்று ஊதினார்கள்.

உடனே, கோட்டைக் கதவிற்குள் அமைக்கப்பட்டிருந்த ஒரு சிறிய துவாரக் கதவு திறந்தது. உள்ளிருந்து ஒரு முகம் எட்டிப் பார்த்தது. வாயிற் காவலர்களை அந்த முகத்துக்குடையவன் ஏதோ கேட்க, அவர்கள் மறுமொழி சொன்னார்கள்.

அடுத்த கணம் உட்புறத்தில் இரும்புத் தாள்களும் பூட்டுகளும் திறக்கப்படும் சப்தம் கேட்டது. பின்னர் அந்த பிரம்மாண்டமான கோட்டைக் கதவுகள், கடகடவென்றும் மடமடவென்றும் சப்தம் செய்து கொண்டு திறந்து, வந்தவர்களுக்கு வழி விட்டன.

கொடி பிடித்த இரு வீரர்களையும் பின்னால் விட்டு விட்டு, தளபதி பரஞ்சோதி அகழியின் பாலத்தைக் கடந்து கோட்டை வாசலுக்குள் முன்னதாகப் பிரவேசித்தார்.

முன் கோட்டை வாசலுக்கு ஏறக்குறைய இருநூறு அடி தூரத்துக்கப்பால், இரண்டாவது சிறுவாசல் ஒன்று காணப்பட்டது.

இரண்டு வாசல்களுக்கும் நடுவில் கீழே கருங்கல் தளவரிசை அமைந்திருந்த வட்ட வடிவமான முற்றத்தில் வேல் பிடித்த வீரர்கள் பலர் அணிவகுத்து நின்றார்கள். இடையிடையே சில வீரர்கள் சுடர் விட்டெரிந்த தீவர்த்திகளைப் பிடித்துக்கொண்டிருந்தார்கள்.

அவர்களுக்கு நடுவில், இரட்டைக் குதிரை பூட்டிய அலங்கார ரதம் ஒன்று காணப்பட்டது. ரதத்திற்குச் சமீபமாகப் பல வீரர்கள் சேர்ந்து பிடித்துக் கொண்டு நின்ற ரிஷபக் கொடியானது வானளாவிப் பறந்தது. திறந்த கோட்டை வாசல் வழியாகக் குபுகுபுவென்று புகுந்து அடித்த வாடைக் காற்றில் அந்தக் கொடி சடசடவென்று சப்தித்துக் கொண்டு ஆடியதானது, புதிய கோட்டைத் தளபதிக்கு உற்சாகமாக வரவேற்புக் கூறுவது போலிருந்தது.

ரதத்தில் குமார சக்கரவர்த்தி மாமல்ல நரசிம்மர் வீற்றிருந்தார். ரதசாரதி கண்ணபிரான் குதிரைகளின் கடிவாளங்களை இழுத்துப் பிடித்துக் கொண்டு கீழே பூமியில் நின்றான்.

கதவு திறந்து தளபதி பரஞ்சோதி உள்ளே பிரவேசித்தாரோ இல்லையோ, மாமல்ல நரசிம்மர் ரதத்திலிருந்து கீழே குதித்தார். அவர் கையினால் சமிக்ஞை செய்யவும், அருகில் நின்ற வீரர்களில் ஒருவன், இடி முழக்கம் போன்ற குரலில், ''சளுக்கப் புலிகேசியின் அரக்கர் படைகளைக் கதி கலங்க அடித்த அசகாயசூரர் வீராதி வீரர் தளபதி பரஞ்சோதி வருக! வருக!'' என்று கூவினான்.

அவனுடைய குரலில் பிரதித்வனியே போல், ''தளபதி பரஞ்சோதி வருக! வருக!'' என்று நூற்றுக்கணக்கான வீரர்களின் குரல்கள் கோஷித்த சப்தம் வானை அளாவிற்று.

அந்தக் கோஷத்துடன் கலந்து, சங்குகளும் கொம்புகளும் தாரைகளும் தப்பட்டைகளும் முரசங்களும் பேரிகைகளும் ஏக காலத்தில் முழங்க, அந்தப் பெருமுழக்கமானது கோட்டை வாசலிலே எதிரொலியை உண்டாக்க இந்தப் பலவகைச் சப்தங்களும் சேர்ந்து அங்கே நின்ற வீரர்களுக்கு உற்சாக வெறியை உண்டாக்கின.

இத்தகைய வரவேற்பைப் பரஞ்சோதி சற்றும் எதிர்பார்க்கவில்லை என்பது அவருடைய முகபாவத்திலிருந்து நன்கு தெரிந்தது. சட்டென்று குதிரை மீதிருந்து அவர் தரையில் குதித்து, ரதத்தின் அருகில் குமார சக்கரவர்த்தி நின்ற இடத்தை அணுகினார்.

தரையிலே விழுந்து நமஸ்கரித்துக் குமார சக்கரவர்த்திக்கு வணக்கம் செலுத்த விரும்பிய பரஞ்சோதியை மாமல்ல நரசிம்மர் தடுத்து இரு கரங்களாலும் அணைத்துக் கொண்டார்.

சற்று நேரம் வரையில் இருவராலும் ஒன்றுமே பேச முடியவில்லை. முதலில் குமார சக்கரவர்த்திதான் பேசினார்:

''தளபதி! நாளெல்லாம் நிற்காமல் பிரயாணம் செய்து வந்தீர் போலும்! களைப்புக் காரணமாக உம்மால் பேசவே முடியவில்லை!''

''பிரபு! நான் பேச முடியாமலிருப்பதற்குக் காரணம் களைப்பு அல்ல; தங்களுடைய அளவில்லா அன்புதான் காரணம்! கோட்டை வாசலுக்கு வந்து என்னை எதிர்



கொள்வீர்களென்று நினைக்கவில்லை...!"

"மகா வீரரே! கோட்டைக்கு வெளியிலே கிளம்பக் கூடாதென்று மட்டும் சக்கரவர்த்தி எனக்குக் கட்டளையிடாமலிருந்திருந்தால் ஒரு காத தூரம் உம்மை எதிர்கொள்வதற்கு வந்திருப்பேன்! சென்ற எட்டு மாத காலமாக உம்மைப் பார்க்கவேணுமென்ற ஆவல் என் உள்ளத்திலே எப்படிப் பொங்கிக் கொண்டிருந்தது என்பது உமக்கு எவ்விதம் தெரியும்?" என்று குமார சக்கரவர்த்தி கூறி, முதலில் தாம் ரதத்தில் ஏறிக் கொண்டு, பரஞ்சோதியையும் தம் பக்கத்தில் உட்கார வைத்துக்கொண்டார். சாரதி கண்ணபிரானும் முன் தட்டில் ஏறி உட்கார்ந்தான்.

"தளபதி! நேரே அரண்மனைக்குப் போகலாமா? உமது விருப்பம் என்ன?" என்று மாமல்லர் கேட்க, பரஞ்சோதி, "பிரபு! போகும்போதே காஞ்சி நகரைச் சுற்றிப் பார்த்துக்கொண்டு போக விரும்புகிறேன். கொஞ்சங் கூடக் காலத்தை வீண் போக்குவதற்கில்லை. இந்த வீரர்களையெல்லாம் முன்னதாக அனுப்பி விடலாம்" என்றார்.

குமார சக்கரவர்த்தி கட்டளையிட்டதன் பேரில், அங்கிருந்த வீரர்கள் பரஞ்சோதியுடன் வந்தவர்களையும் அழைத்துக் கொண்டு, முன்னால் விரைந்து சென்றார்கள்.

சாரதி கண்ணபிரான் குதிரைகளின் தலைக் கயிற்றை லாகவமாக ஒரு குலுக்குக் குலுக்கியதும், ரதமும் அங்கிருந்து நகர்ந்தது.

கோட்டை வாசலின் கதவுகள் மீண்டும் சாத்தப்பட்டன. சிறிது நேரம் ஒரே கலகலப்பாயிருந்த வடக்குக் கோட்டை வாசலில் பழையபடி நிசப்தம் குடிகொண்டது.

## இரண்டாம் அத்தியாயம்

# பழைய நண்பர்கள்

ரதம் கோட்டையின் உள் வாசலைக் கடந்து காஞ்சிமாநகரின் அழகிய விசாலமான வீதிகளில் போகத் தொடங்கிய போது, பரஞ்சோதிக்குப் பழைய நினைவு வந்தது. எட்டு மாதங்களுக்கு முன்னால் ஒரு நாள் இதே அந்தி நேரத்தில், இதே விதமாகப் பூரணச் சந்திரன் கீழ்வானத்தில் உதயமாகிக் கொண்டிருந்த சமயத்தில், தாம் தெற்குக்கோட்டை வாசல் வழியாகக் காஞ்சி நகருக்குள் பிரவேசித்ததும், அன்றிரவு நிகழ்ந்த சம்பவங்களும் அவர் உள்ளத்தில் விரைவாகத் தோன்றின. அன்று அவர் காஞ்சியில் பிரவேசித்ததற்கும் இன்று பிரவேசித்ததற்கும் எவ்வளவு வித்தியாசம்?

"தளபதி! என்ன ஒரேயடியாக மௌனத்தில் ஆழ்ந்து விட்டீர்?" என்று மாமல்லர் கேட்டதும், பரஞ்சோதி சிந்தனை உலகிலிருந்து வெளி உலகத்துக்கு வந்தார்.

"மன்னிக்க வேண்டும், பிரபு! தங்களுடைய அன்பானது அப்படி என்னை மெய் மறக்கச் செய்து விட்டது. தென்னாட்டிலுள்ள மல்லர்களையெல்லாம் வென்று மகாமல்லர் என்று பட்டம் பெற்ற பல்லவ குமாரனின் பக்கத்தில் சமமாக உட்கார்ந்து போவது நான்தானா என்று எனக்கே சந்தேகமாயிருக்கிறது!"

"நல்ல சந்தேகம்! உமக்குப் பக்கத்தில் உட்கார்ந்து செல்வது எனக்கல்லவா கௌரவம்! ராட்சசப் புலிகேசியின் சேனா சமுத்திரத்தை மந்திரகிரியைப் போல் கடைந்து கலக்கிய மகாவீரனல்லவா நீர்? வாதாபி யானைப் படையாகிய மேகத்திரளைச் சிதற அடித்த பெரும்புயற்காற்று அல்லவா நீர்?"

"பல்லவக் குதிரைப் படையின் சாகசச் செயல்களின் புகழ் காஞ்சி வரையில் வந்து எட்டியிருக்கிறதா?" என்று தம்முடைய புகழைப் படையின் புகழாக மாற்றிக் கூறினார் தளபதி.

"ஏன் எட்டவில்லை? வாரந்தோறும் சக்கரவர்த்தி அனுப்பிய ஓலைகளிலிருந்து நீர் தலைமை வகித்த குதிரைப் படையின் வீரச் செயல்களையெல்லாம் அவ்வப்போது தெரிந்து கொண்டோம். தெரிந்த விவரங்களைப் பறையறைந்து நாடு நகரமெல்லாம் தெரியப்படுத்தினோம்!" என்றார் மாமல்லர்.

"ஆஹா! தங்களுடைய அன்பினால் எப்படி மெய்ம்மறந்து போனேன், பார்த்தீர்களா? சக்கரவர்த்தி கொடுத்த ஓலையைத் தங்களிடம் கொடுக்க மறந்து விட்டேன்!" என்று கூறிக் கொண்டே பரஞ்சோதி இடுப்பில் பத்திரமாகச் செருகியிருந்த ஓலைக் குழாயை எடுத்துக் கொடுத்தார்.

"தளபதி! இது சக்கரவர்த்தி கொடுத்த ஓலைதானே? எங்கேயாவது வழி நடுவில் ஓலை மாறிவிடவில்லையே?" என்று மாமல்லர் சிரித்துக் கொண்டே கேட்டார்.

"அந்த வரலாறு கூட தங்களுக்குத் தெரியுமா?" என்று பரஞ்சோதி கூறிய போது, அவருடைய முகத்தில் மலர்ந்த புன்னகையில் நாணமும் கலந்திருந்தது.

"ஆமாம், தெரியும்! நீர் இங்கிருந்து போகும் வழியில், வஜ்ரபாஹுவைச் சிநேகம் செய்து கொண்டது முதற்கொண்டு,



**"மந்திரி சபையிலே மொத்தம் தொண்ணூற்றிரண்டு மந்திரிகளை நியமிக்கிறதா இருந்தேன். பொருளாதார நிலைமையைக் கருதி, சிக்கன நடவடிக்கையாக எண்பத்தாறு மந்திரிகளைத்தான் நியமிக்கப் போகிறேன்!"**

எல்லாம் எனக்குத் தெரியும்...!'' என்றதும், இரண்டு பேருமே கலகலவென்று நகைத்தார்கள்.

மாமல்லர் மேலும் தொடர்ந்து கூறினார்: ''சக்கரவர்த்தி எட்டு மாதத்துக்கு முன்பு இங்கிருந்து கிளம்பிய போது, 'நானும் வருவேன்' என்று எவ்வளவோ பிடிவாதம் பிடித்தேன். சக்கரவர்த்தி அதை உறுதியாக மறுத்து விட்டார். அப்படியானால் வாரா வாரம் போர்க்களத்தில் நடப்பதையெல்லாம் விவரமாக எழுதியனுப்ப வேண்டும் என்று கேட்டுக்கொண்டேன். அந்தப்படியே சக்கரவர்த்தி எழுதி அனுப்பி வருகிறார். தளபதி! இன்றைக்குத் தான் நான் உம்மை முதன் முதலில் பார்க்கிறேன். ஆனாலும், நீர் எனக்குப் புதியவர் அல்ல; சக்கரவர்த்தி அனுப்பி வந்த ஓலைகளின் மூலமாக உம்முடன் சென்ற எட்டு மாதமும் பழகி வந்திருக்கிறேன். உம்மை இன்று பார்த்ததும், புதிய மனிதராகவே எனக்குத் தோன்றவில்லை. வெகு காலம் பழகிய சிநேகிதராகவே தோன்றியது....!''

''பிரபு எனக்கும் அப்படியேதான் தோன்றுகிறது. கிளிப் பிள்ளையைப் போல் தாங்கள் சொன்னதையே திருப்பிச் சொல்வதாக நினைக்க வேண்டாம். உண்மையில், அப்படித்தான். ஏனென்றால், சென்ற எட்டு மாதத்தில் சக்கரவர்த்தி தங்களைப் பற்றி ஏதாவது பேசாத நாளே கிடையாது. அதனால், எனக்கும் தாங்கள் புதியவராகவே தோன்றவில்லை.''

குமார சக்கரவர்த்தி பரஞ்சோதியின் கரங்களை இறுகப் பிடித்துக் கொண்டு, ''தளபதி! அப்படியானால் நாம் இருவரும் பாக்கியசாலிகள்தாம். தெய்வப் புலமைத் திருவள்ளுவரின் வாக்கு நம் விஷயத்தில் முற்றும் உண்மையாயிற்று.

**புணர்ச்சி பழகுதல் வேண்டா**
**உணர்ச்சிதான்**
**நட்பாங் கிழமை தரும்***

என்று தமிழ்மறை சொல்லுகிறதல்லவா? இருக்குறள் ஆசிரியருக்குப் பொய்யா மொழிப் புலவர் என்ற பட்டம் முற்றும் பொருத்தமானது!'' என்று உற்சாகமாகக் கூறினார்.

அதற்குப் பரஞ்சோதி, ''பல்லவ குமாரரே! மன்னிக்க வேண்டும். நான் கல்வி அறிவு என்பதே இல்லாதவன். பள்ளிக் கூடத்தின் நிழலில் கூட ஒதுங்காதவன். திருவள்ளுவரையும் அறியேன்; அவருடைய திருக்குறளையும் அறியேன். எனக்குக் கல்வி புகட்டும் பொறுப்பைச் சக்கரவர்த்தி தங்களுக்கு அளித்திருக்கிறார். ஓலையைப் படித்துப் பார்த்தால் தெரியும்'' என்றார்.

இந்த வார்த்தைகள் குமார சக்கரவர்த்திக்குச் சிறிது கூச்சத்தை உண்டாக்கின. ''அதற்கென்ன, தளபதி! சக்கரவர்த்தியின் கட்டளை எதுவானாலும் சந்தோஷமாக நிறைவேற்றி வைக்க நான் கடமைப்பட்டவன்...'' என்று அவர் சொல்லி முடிப்பதற்குள், தளபதி பரஞ்சோதி, ''ஆனால், எனக்குக் கல்வி கற்பிக்கும்படி சக்கரவர்த்தி தங்களுக்கு ஆக்ஞை இட்டிருப்பது என்னுடைய நன்மைக்காக அல்ல; தங்களுடைய நன்மைக்காகத்தான்!'' என்றார்.

மாமல்லர் ஒன்றும் விளங்காமல் பரஞ்சோதியின் முகத்தை ஏறிட்டுப் பார்க்க, அவர் மேலும் கூறுவார்; ''ஆம்! பிரபு! தங்களிடத்தில் எல்லா நல்ல குணங்களும் இருக்கின்றனவாம்; ஆனால், பொறுமையும் நிதானமும் மட்டும் குறைவாம். எனக்குக் கல்வி புகட்ட ஆரம்பித்தீர்களானால், உங்களுக்கும் பொறுமை வந்து விடுமாம்! என்னுடைய அறிவுக் கூர்மையில் சக்கரவர்த்திக்கு அவ்வளவு நம்பிக்கை!'' என்றதும், மாமல்லர் குபீரென்று சிரிக்க, அதைப் பார்த்துப் பரஞ்சோதி சிரிக்க, இருவரும் சிரிப்பதைப் பார்த்து, அடக்கி அடக்கிப் பார்த்தும் முடியாமல் சாரதி கண்ணபிரானும் சிரிக்க, இந்தக் கோலாகலம் என்னத்திற்கு என்று தெரியாமல் ரதத்தை இழுத்துச் சென்ற குதிரைகளும் கனைத்தன.

குதிரைகள் தங்களுக்குச் சுபாவமான இனிய குரலில் கனைப்பதைக் கேட்டு, மறுபடியும் ஓர் ஆவர்த்தம் மூவரும் சிரித்தார்கள்.

(தொடரும்)

* சாதாரணமாக, ஒருவரையொருவர் அடிக்கடி சந்தித்துக் கலந்து பழகுவதனால் நட்பு உண்டாகி வளருகிறது. ஆனால், இரண்டு பேருக்குள் ஒத்த உணர்ச்சி இருக்கும் பட்சத்தில், மேற்சொன்னவாறு கலந்து பழகுதல் இல்லாமலே நட்பாகிய தலைசிறந்த உறவு ஏற்பட்டுவிடும்.

# பங்காளிகள்

முக்கியமான பிரச்னை இன்றுடன் தீர்ந்தது. பெரியப்பா வீடு கிரகப் பிரவேசத்திற்கு அன்பளிப்பாக கேட்ட இஸ்திரிப் பெட்டி வாங்கியாகி விட்டது. இனி அவர் பிள்ளைகளின் தொந்தரவு இருக்காது. வழியில் கண்டு மறைய வேண்டியதில்லை.



பெரியப்பா புது வீடு கட்டி, நேற்று கிரக பிரவேசம் நடந்தது. நேற்றே செல்ல முடிய வில்லை. வெள்ளிக் கிழமை சென்றால் அன்று இரவே திரும்ப வேண்டும். இருந்த லீவை எல்லாம் எடுத்தாகி விட்டது. இதற்காக வெள்ளியுடன் சேர்த்து சனியும் லீவு போட்டால் மூன்று நாள் 'லாஸ் ஆப் பே' தான். போய்த் திரும்ப பஸ் செலவு! என்ன செய்யலாம் என்று யோசனை செய்தவன் சென்ற வாரமே பெரியப்பாவுக்கு சனிக் கிழமை 'ஷிப்ட்' முடிந்து வருவதாகக் கடிதம் எழுதிவிட்டான்.

தான் செய்யும் ஹெல்பர் வேலையில் கிடைக்கும் ஐந்நூறு சம்பளத்தில் இரவு ஓ.டி. பார்த்துச் சேர்த்துச் சாப்பாட்டுச் செலவு போக, முந்நூறு மிச்சப்படும். அதைத் தான் வீட்டிற்கு அனுப்புவான். இதற்கு அப்பா ரெடியாக 'பட் ஜெட்' தயார் செய்து வைத்திருப்பார். நல்ல பேண்ட், சட்டை கூட எடுக்க முடியவில்லையே என்று வருத்தப்படுவான்.

முன்பு ஒரு முறை பெரியப்பா வீட்டிற்குப் போன போது, ''ஏண்ணே.. நீ வேலைக்குப் போயி ரெண்டு வருஷம் ஆகுது. எங்களுக்கு ஏதாவது வாங்கி கொடுத்தியா?'' பெரிய பெண் தைலா கேட்டாள்.

''என்ன வேணும்?''



''ஒரு பாவாடை, தாவணிதான் வாங்கித் தாயேன். உன் ஞாபகமாக் கட்டிக்கிறேன்...''

''ஏண்டி.... அவன் ஐந்நூறு சம்பளம் வாங்கி அதிலே ரூம் எடுத்துத் தங்கி, சாப்பிட்டு, மீதியை வீட்டுக்குக் கொடுக்கிறான் அவன்கிட்டக் கேட்டா நூறு இருநூறுக்கு எங்க போவான்?'' பெரியம்மா இடைமறித்துக் கேட்டாள்.

பெரியப்பா இவனை வேலைக்குச் சேர்த்து விட்டதிலிருந்து, நன்றிக்காக அரை கிலோ 'ஸ்வீட்' வாங்கிக் கொடுத்த தோடு சரி, அதன் பிறகு முதன் முதலாகக் கேட்கிறதே! வாங்கிக் கொடுத்தால் என்ன என்று நினைத்து, ''அடுத்த மாதம் வாங்கித் தருகிறேன்..'' என்றான்.

அடுத்த முதல் தேதி வாங்க முடிய வில்லை. கைக்குக் கிடைத்த சம்பளத்தில் அது இது என்று ஐம்பது ரூபாய் பிடித்து விட்டார்கள். ஓ. டி. வேறு இல்லை. அடுத்த மாதம் பார்ப்போம் என்று நினைத்து, அந்த மாதத்தில் பெரியப்பா வீட்டிற்குப் போகவில்லை!

இடையில் ஒரு நாள் கோவிலுக்குச் சென்று வந்த பெரியம்மா, பிள்ளைகள்... ''ஏன் இவ்வளவு நாள் வீட்டிற்கு வர வில்லை..? இவ பாவாடை, தாவணி கேட்டதுக்காக வரலையா..? அதனால் என்ன... அம்மா வரக் கூடாதா? என்று கேட்டார்கள்.

எப்படியோ வாக்குறுதி கொடுத்தாகி விட்டது. இல்லையேல், 'சம்பாதிக்கிறான்; கேட்டதைச் செய்ய முடியவில்லை... எவ்வளவு கஷ்டப்பட்டு வேலைக்குச் சேர்த்து விட்டார்...' என்று குறை சொல்வார்கள் என்று நினைத்து, அப்போது முதல் சிக்கனத்தைக் கடைப்பிடித்தான். எட்டு இட்லி சாப்பிட்டவன் இரண்டைக் குறைத்தான். ஐந்து ரூபாய்ச் சாப்பாடு சாப்பிட்டவன், நான்கு ரூபாய்ச் சாப்பாட்டைத் தேடிப் போனான். ஷிப்ட் நேரத்தில் 'டீ' குடிப்பதை நிறுத்தினான். சினிமா பார்ப்பதை நிறுத்தினான். இரவு ஓ.டி. பார்த்தான். அந்த மாதமே நூற்று ஐம்பது ரூபாய்க்குப் பாவாடை, சட்டை, தாவணி மூன்றும் எடுத்துக் கொடுத்தான்.

இந்த விஷயம் மற்ற சித்தப்பாக்களுக்குப் பிள்ளைகள் மூலமாகத் தெரிந்தது. வழியில் எங்கேயாவது கண்டால், முகத்துக்கு முகம் ஒரு மாதிரி பார்த்தார்கள். சாதாரணப் பார்வையில் பொறாமை தெரிந்தது! 'பெரிய மனுஷனாயிட்டான். எங்களைத் திரும்பிப் பார்ப்பதில்லை' என்று அவர்கள் அடுத்தவர்களிடம் புலம்பித் தீர்த்தார்கள்.

அடுத்த இரண்டாவது மாதத்தில் ஐந்து

**சத்தியசந்தன்**



## அருள்வாக்கு

*பகவத்* ஸ்மரணத்தைவிட பகவத்பாத ஸ்மரணம் அதிக சாந்தி! நல்லது கெட்டது எல்லாவற்றுக்கும் காரணமாயிருந்து கொண்டு, கெட்டதற்காக நம்மைத் தண்டிக்கவும் செய்யும் பகவானை விட, நல்லதே செய்து கொண்டு, நாம் எத்தனை கெட்டுக் குட்டிச் சுவராயிருந்தாலும் நம்மை உத்தரிப்பதற்கென்றே வந்த பகவத்பாதாளை ஸ்மரிப்பதே நமக்குப் பெரிய சாந்தி.

'எப்படி மனஸை அர்ப்பிப்பது, அதாவது அது கண்ட கண்டதுகளை நினைக்காமல் அவரையே எப்படி மனதில் கொண்டு வந்து நிறுத்திக் கொள்வது?' என்றால், ஸுலபமாக வழி சொல்லித் தருகிறேன். "ஹர ஹர சங்கர, ஜய ஜய சங்கர" என்று மனசுக்குள்ளேயே சொல்லிக் கொள்வது தான் வழி. அதன் வழியாக அவர் மனஸுக்குள் வந்துவிடுவார். "வையகம் துயர் தீர" ஞானசம்பந்தர் காட்டிக் கொடுத்த வழி ஹரநாம உச்சாரணந்தானே?

ஆழ்க தீயதெல்லாம்! அரன் நாமமே
சூழ்க வையகமுந் துயர் தீர்கவே!

அதனால் "ஹரஹர" என்று சங்கர நாமாவோடு சேர்த்துச் சொல்வோம். அவர் திக்விஜய சங்கரராக இருந்ததால் "ஜய ஜய" என்றும் சேர்த்துச் சொல்வோம். வேறே உபந்நியாசம் வேண்டாம், புத்தி ஸாமர்த்தியங்கள் வேண்டாம்.

"எதற்கு வ்ருதாவாக (வீணாக) சாதுர்ய வாதங்கள் பண்ணிக் கண்ட க்ஷோபம் (தொண்டைக்கு உபத்திரவம்) விளைவித்துக் கொள்கிறாய்! நீ புத்திசாலி இல்லையா? பேசாமல் சம்புவின் பாத பத்மங்களை நினைத்துக் கொண்டு பரமானந்தத்தை அனுபவி" என்று அந்தச் சம்புவின் பாதமாக வந்த பகவத்பாதாளே சொல்லியிருக்கிறார்.

— ஜகத்குரு காஞ்சி காமகோடி
ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி
சங்கராச்சாரிய சுவாமிகள்.

வருஷங்களாகக் கஷ்டப்பட்டுக் கட்டிக் கொண்டிருந்த வீடு முழுமை அடைந்து விட்டது. தை மாதம் கிரகப்பிரவேசம். "ஒரு வாரம் லீவு போட்டு விட்டு வந்துடு.... எல்லா வேலையும் நீ தான் கவனிக்கணும்." என்றாள் பெரியம்மா.

"வீடு குடி போறதுக்கு நீ என்ன செய்யப் போற?" இரண்டாவது பெண் சுமதி கேட்டாள்.

"அண்ணே... எங்களது பழைய இஸ்திரிப் பெட்டி ரிப்பேர் ஆகிச் சரியில்லாமப் போச்சு. நீதான் புது இஸ்திரிப் பெட்டி வாங்கித் தரணும்..." என்று தைலா முந்தி கொண்டு சொன்னாள்.

ஐந்து வருடங்களாகக் கஷ்டப்பட்டு வீடு கட்டிக் குடி செல்கிறார்கள். உறவினர்கள் அவரவர் தகுதிக்குத் தகுந்தாற் போல் அன்பளிப்புச் செய்வார்கள். நமக்கு வேலை வாங்கிக் கொடுத்தவர் தானே! என்று நினைத்து, "வாங்கித் தருகிறேன்" என்றான்.

அன்று முதல் சிக்கனமாக இருந்தான். இரவு ஷிப்ட் ஓ.டி. பார்த்தான். ஒருவழியாக இருநூறு சேர்த்து நூற்றுத்தொண்ணூறு ரூபாய்க்கு இஸ்திரிப்பெட்டி வாங்கிக் கொண்டு பெரியப்பா வீட்டுக்கும் பஸ் ஏறி விட்டான்.

**ப**ஸ்ஸை விட்டு இறங்கிப் பள்ளிக் கூடத்தைத் தாண்டியதும் பெரியப்பாவின் புது வீடு தெரிந்தது. வாசலில் தெருவை அடைத்துப் பந்தல் போட்டிருந்தார்கள். இரண்டு மாதம் கழித்து இப்போது தான் வருகிறான். என்ன சொல்வார்களோ என்று அடிவயிற்றில் சுர்ரென்று ஒரு வலி உணர்வு தெரிந்தது.

உள்ளே நுழைந்ததும் "வா கதிரேசா..." என்று பெரியப்பா வரவேற்றார்.

"பெரிய மனுஷனாயிட்டான். நல்ல காரியத்துக்குக் கூட லீவு போட்டுட்டு வர முடியல.... ரெண்டு நாள் சம்பளம் தான் பெரிசாப் போயிட்டுது உனக்கு..." பெரியம்மா புலம்பினாள்.

கையில் கனத்த இஸ்திரிப் பெட்டியைத் தூக்கித் தைலாவிடம் கொடுத்தான்.

பிரித்துப் பார்த்தவள், "அய்ய, சாதாவப் போயி வாங்கிருக்கே... ஆட்டோமாடிக் வாங்கக் கூடாது, இருக்கிறதுல வெல கம்மியா வாங்கிருக்கே..."

நொடிப் பொழுதில் தாக்கப் பட்டதாக






# மிருதுவான போஷாக்கு

**உங்கள் குழந்தைக்கு 4 மாதங்களாகும் சமயத்தில் அவனது இயற்கை உணவான பாலுடன் எளிதில் ஜீரணிக்க உகந்த போஷாக்கு உணவான நெஸ்டத்தையும் கொடுங்கள்.**

பாலுடன் கலந்து தயாரிக்கப்பட்ட நெஸ்டம் உங்கள் குழந்தையின் மிருதுவான முதல் திட உணவாகும். ஏனெனில் இதில் குழந்தை ஆரோக்கியமாய் வளர்வதற்குரிய எல்லா போஷாக்குகளும் சமச்சீர் அளவில் அடங்கியுள்ளன. உங்கள் குழந்தையின் உணவில் வெவ்வேறு சுவையைக் கூட்ட விரும்பினால், அவ்வகை உணவுடன் நெஸ்டத்தை கலந்து கொடுங்கள். உதாரணமாய் வேக வைத்த பழங்கள், வேகவைத்து மசிய வைத்த காய்கறிகள் மற்றும் பருப்பு வகைகள்.

அரிசி சேர்த்த நெஸ்டம் போஷாக்கு நிறைந்த ஸீரியல் ஆகும். உங்கள் குழந்தை இதை எளிதில் ஜீரணிக்கும். உங்கள் குழந்தையின் வளர்ச்சிக்கு மருத்துவர்கள் சிபாரிசு செய்யும் எல்லாவித போஷாக்கும் இதில் உள்ளன. உறுதியான எலும்புகளுக்கும் பற்களுக்கும் தேவையான கால்ஷியம், ஆரோக்கியமான ரத்தத்திற்கு தேவையான இரும்பு சத்து, பட்டு போல் பளபளக்கும் சருமத்திற்கும், ஒளிவீசும் கண்களுக்கும், நோய் எதிர்ப்பு சக்திக்கும் தேவையான வைட்டமின்களும் இதில் அடங்கியுள்ளன.

உங்கள் செல்லக் குழந்தை நெஸ்டத்துடன் சேர்ந்து வளர்வதை கவனியுங்கள்.

இலவச நெஸ்டம் செய்முறை புத்தகத்திற்கு எழுதுங்கள். போஸ்ட் பேக் 23, புது டில்லி-110016.

**எளிதில் ஜீரணிக்க வல்ல பேபி ஸீரியல்.**

**நெஸ்டம்**

உணர்ந்தான். இது வாங்க எவ்வளவு கஷ்டப் பட்டிருப்பான் என்பது அவனுக்குத் தான் தெரியும். தூக்கத்தைக் குறைத்து, சாப்பாட்டைக் குறைத்து.. எல்லாம் மனசில் நிழல் போல் வந்து போயின. "ஆட்டோமாடிக் இல்லேன்னாலும் தரமானது; உபயோகப்படுத்திப் பாரு தெரியும்" என்றான்.

இரவு சாப்பிட்டு விட்டுத் தன் ரூமுக்குச் செல்லப் புறப்பட்டான் கதிரேசன்.

"ஊருக்குப் போயிட்டு அப்புறம் எப்பவண்ணா வருவே?" பெரியப்பா பையன் முரளி கேட்டான்.

"ஏண்டா?"

"கிரக பிரவேசத்திற்குப் போட்டோ எடுத்த பிலிமைக் கழுவிப் பிரிண்ட் போட்டு வாங்கி வந்திருக்கேன். அதை வைக்க ரெண்டு ஆல்பம் வேணும். நீ வரும் போது வாங்கிவா..." என்றான்.

மறுத்துப் பேசத் தோன்றவில்லை. "அடுத்த வாரம் வாங்கி வருகிறேன்" என்று விடை பெற்று, வாசலுக்கு வந்தான்.

இஸ்திரிப் பெட்டி பிரச்னை முடிந்து, இப்போது புதியது முளைத்து விட்டது. ஆல்பம் நல்லதாக வாங்க நூறு ரூபாயாவது வேணும். பணம் சேருகிற வரை பெரியப்பா வீட்டிற்கு வர முடியாது. எங்கேயாவது பெரியம்மா, பிள்ளைகளைக் கண்டால் மறைவான இடம் தேடி மறையத் தோன்றும். நம் கஷ்டம் அவர்களுக்குப் புரியவில்லையே என்று மன வருத்தம் புகை மூட்டம் போல் படர்ந்திருக்கும். இப்படித்தான் பங்காளிகளுக்குள் இடைவெளி வருமா?

"கதிரேசா நில்லுப்பா.. யார்ராது அவனை ஆல்பம் கேட்டது?" என்று உள்ளே ரூமில் இருந்து பெரியப்பா குரல் கொடுத்துக் கொண்டே கையில் ஒரு பார்சலுடன் வெளியே வந்தார்.

சில்லென்ற காற்று உடம்பைத் தாக்கியது போல் உடம்பைச் சிலிர்த்துக் கொண்டான். மனசில் சந்தோஷம்; பார்வையில் மலர்ச்சி.

பெரியப்பா தொடர்ந்தார், "சும்மா... சும்மா.... அது வாங்கிவா.... இது வாங்கிவான்னு அவனத் தொந்தரவு பண்ணிக்கிட்டே இருக்கீங்களே... எங்கிட்டச் சொன்னா நா வாங்கி வர மாட்டேன்.... வாங்குகிற சம்பளத்த அவன் குடும்பத்துக்குக் கொடுக்க வேண்டாமா? கழுதைங்களா?" என்று திட்டிக் கொண்டே, "இந்தா, கிரகப் பிரவேசத்துக்கு இங்க எல்லோருக்கும் புது டிரஸ் எடுத்தேன். அப்படியே உனக்கும் எடுத்திருக்கேன். பிரித்துப் பாரு..." என்று கையில் இருந்த பார்சலைக் கொடுத்தார்.

ஆச்சர்யம் பூக்கப்பார்சலைக் கையில் வாங்கிப் பிரித்தான். அவனுக்குப் பிடித்த கலரில் பேண்ட், சட்டைத் துணிகள் இருந்தன!



# சாம்பலிலிருந்து தங்கம்!

* ஹாஜி. மு. அ. பீர்முகம்மது

படத்தைப் பார்த்துவிட்டு, யாரோ, சுண்ணாம்புக் காறை அரைப்பதாக நினைத்துவிடாதீர்கள். பல்வேறு ஊர்களி லும் உள்ள பொற்கொல்லர் பட்டறைகளில் மிஞ்சும் சாம்பலையெல்லாம் குத்தகைக்குப் பிடித்துக் கொண்டு வந்துதான் இப்படிப் போட்டு அரைக்கிறார்கள். எதற்கு என்கிறீர் களா? நகை செய்யும் போது பட்டறைகளில் சிதறும் சிறுசிறு தங்கத் துகள்களைப் பிரித் தெடுப்பதற்காகத்தான்! நெல்லை மாவட் டத்திலிருக்கும் வீரவநல்லூர் என்னும் ஊரில் சுமார் முந்நூறு குடும்பங்கள் இத் தொழிலைத்தான் நம்பியிருக்கின்றன!

சாம்பலோடு கலந்திருக்கும் தங்கத்தை, எப்படிப் பிரித்தெடுக்கிறார்கள் என்பதைத் தெரிந்து கொள்ள வேண்டாமா? தோட்டத் துக்கு விசிட் அடிப்போம்!

சாம்பல் மண்ணை முதலில் ரோதைக் குழியில் போட்டு, மாவுப் பொடியாக ஆட்டு கிறார்கள். இப்போது அரிப்பதற்கு மண் தயார்!

மறுநாள் காலை ஆளுக்கு ஓர் 'ஒனி' யில் உட்காருகிறார்கள்! ஒனி — தேக்கு அல்லது மஞ்சக் கடம்பு மரத்தில் செய்யப் பட்ட நீள் சதுரப் பலகை! நீர் வடிவதற்கு வசதியாகச் சாய்ந்த நிலையில் வைத்துக் கொள்கிறார்கள்! கீழ்ப் பகுதியில் செங்கல் துண்டுகளால் அடைப்பு!

சட்டியில் மண்ணை அள்ளி, ஒனிப் பல கையில் போடுகிறார்கள்! தம்ளரில் நீரை மொண்டு ஒனியில் கொட்டப்பட்ட மண் ணில் தெளிக்கிறார்கள். அதாவது, லாகவ மாகக் கைவிரல்கள் மீதுதான் ஊற்றுகிறார் கள்! நேரடியாய் ஊற்றினால் வேகத்தில் தண்ணீரோடு தங்கமும் சேர்ந்து கீழே ஓடி விடுமாம்!

இப்படி 'ஒனி'யிலிருந்து அரித்து எடுக் கப்படும் மண்ணைச் 'சரக்கு மண்' என்கி றார்கள்! இதில் தங்கத்தோடு மற்ற உலோ கங்களும் கலந்திருக்கும்!

இந்த மண்ணை அப்படியே கொண்டு போய், வீட்டில் தனி அறையிலிருக்கும் ஒரு பெரிய தொட்டியில் போடுகிறார்கள்! பத்து நாட்களில் இருபது லிட்டர் மண் சேர்ந்த

வுடன், அடுத்த கட்ட அரிப்பு!

இருபது லிட்டர் சரக்கு மண்ணில் இவ்வளவு தங்கம் இருக்கிறது என்பதைக் குத்து மதிப்பாய்க் கணக்கிட்டு விடுகிறார்கள்! இந்த அளவு தங்கத்துக்கு மூன்று மடங்கு பாதரசத்தையும், கூடவே கொஞ்சம் உப்பு – புளியையும் போட்டு நன்றாகப் பிசைந்து கட்டி கட்டியாய் உருட்டுகிறார்கள்!

இந்தப் பாதரசக் கலவைக் கட்டிகள் மீண்டும் தோட்டத்துக்குப் போய், பழைய 'ஒனி' அரிப்புக்கு உள்ளாகிறது! இந்த அரிப்பில் கிடைக்கும் கலவைக்கு 'ரசப் புட்டு' என்று பெயர்!

இதனுடன் நைட்ரிக் அமிலத்தைக் கலந்து புடம் போடும் போது, தங்கம் மட்டும் தனியாகக் கிடைக்கிறது!

"புடம் போடுவது என்றால், எப்படி?"

"அதை மட்டும் கேட்டு விடாதீர்கள்! தொழில் ரகசியம்!" எல்லோருமே இதற்கு மேல் சொல்ல மறுக்கிறார்கள்!

இந்த அரிப்புத் தொழிலின், ஆரம்ப கர்த்தாவான ஆதம் சேட்டின் புதல்வர், ஹாஜி பீர்முகம்மதுவைச் சந்திக்கிறோம்:

"எங்க தந்தையார் எங்களுக்குத் தந்து விட்டுச் சென்ற சொத்தே, இதுதானுங்க! வேலை இல்லை என்று இந்த ஊர்ல யாரும் சொல்லக் கூடாது என்பதில் உறுதியாக இருந்தாங்க! 1969 இல் தந்தையார் காலமானாங்க! அதற்குப் பிறகு நாங்க தொடர்ந்து நடத்திட்டு வர்றோம்."

"சாம்பல் மண்ணை எங்கிருந்தெல்லாம் எடுத்து வர்றீங்க?"

"கேரளா, தமிழ்நாடு ரெண்டு மாநிலங்களிலேயும் எல்லா இடங்களுக்கும் போய் எடுக்கிறோம். சேலம் – சேந்தமங்கலம் என்ற ஊரிலிருந்துதான் அதிகமான லோடு எங்களுக்கு வருகிறது! அங்கேயும் அரிப்புத் தொழில் நடக்குது! ஆண்களும் பெண்களும் பாக்கிறாங்க! ஆனால் அவங்க முதல் அரிப்போடு மண்ணைக் கழித்து விடுறாங்க! இந்த மாதிரி நுட்பமான வேலையெல்லாம் அவங்களுக்குத் தெரியாது! அதனால அவங்ககிட்ட சேருகிற மண்ணையெல்லாம் நாங்க மொத்தமா லாரியில ஏத்திக் கொண்டு வருகிறோம்! வீணாய்ப் போய்க் கொண்டிருந்த தங்கத்தை எங்களின் தொழில் நுட்பத்தால் பிரித்தெடுத்து, இராமபிரானுக்கு உதவி செய்த அணிலாய், இந்நாட்டின் பொருளாதார உயர்வுக்கு உதவுகிறோம்"

"வளர்ந்து வரும் விஞ்ஞான யுகத்தில், இத்தொழிலை இன்னும் கொஞ்சம் எளிதாக்கலாமே! சாத்தியமா?"

"முன்னால ரோதை ஆட்டுவதெல்லாம் கிடையாது! நான்தான் ஒரு தடவை சாத்தான்குளம் சென்றிருந்த போது, அங்கு சுண்ணாம்புக்கு அரைப்பதைப் பார்த்துவிட்டு வந்து, அதை எங்க தொழிலுக்கு அப்ளை பண்ணினேன்! சக்ஸஸ்!"

"வேறு?"

"மழைக் காலத்தில் ரோதை ஆட்டுவது கஷ்டமாக இருந்தது! யோசித்து யோசித்துப் பார்த்தேன்! பலன் கிட்டியது! மாவுப் பொடி தயாரிக்கும் டிஸிண்டரி கேட்டர் மிஷினில் சாம்பல் மண்ணைப் போட்டுப் பொடியாய் அரைத்தேன்! இதுவும் சக்ஸஸ் தான்!" வார்த்தைகளில் பெருமிதம் பொங்குகிறது!

"உங்க தொழில் பற்றி வேறு எதும் கூற விரும்புறீங்களா?"

"டிஸிண்டிடரிகேட்டர் மிஷின் வாங்க, நெல்லை – சென்ட்ரல் பேங்கை அணுகினேன்! "சாம்பல் மண் அரிப்புத் தொழிலுக்குக் கடன் கொடுக்க, வங்கியின் விதிமுறைகள் இடம் கொடுக்கவில்லை" என்று பாங்க் மானேஜர் கூறிவிட்டார்! விடவில்லை நான்! "கோலப் பொடி தயாரிக்கிறேன்" என்று சொன்னேன்! 35,000 ரூபாய் லோன் சேங்ஷன் பண்ணினார்கள்! அதனால் இப்போது அரிப்புத் தொழிலோடு கோலப் பொடி தயாரிப்பதற்கும் டிஸிண்டரி கேட்டரைப் பயன்படுத்தி வருகிறேன்! பொய் சொல்லிக் கடன் வாங்கக் கூடாதல்லவா? அதற்காக! கோலப் பொடி தயாரிக்கக் கடன் உண்டு; தங்கம் மீட்டுத் தரக் கடன் இல்லை என்கிற இந்த விசித்திர வங்கி மனப்பான்மை மாறினால் நல்லது!" என்று சிரித்துக் கொண்டே கூறி, அன்புடன் விடை தருகிறார் ஹாஜி பீர்முகம்மது!



வாசகர் யோசனை;
கட்டுரை:
**நெல்லை குரலோன்.**
படங்கள்: **சித்ரா ஸ்டுடியோ.**

"ஏம்பா, பொங்கல் முடிஞ்சு போய் எவ்வளவு நாள் ஆகுது...? நீ இப்ப வந்து பொங்கல் இனாம் கேட்கிறியே?"

"என்ன எசமான் பண்றது... நீங்க தான் இனாமுக்குப் பயந்து ஒரு மாசமா, வெளியே தலை காட்டாமலேயே இருந்துட்டீங்களே!"

— சீர்காழி வி. ரேவதி.



# ஆகாசத் தாமரை 3

அடுத்த நாள் செய்தித் தாளைப் பிரித்ததும், மஞ்சுளா அதிர்ச்சியுற்றாள். அவள் அன்றுபார்க்கஇருந்தநிதித்துறைச்செயலரை வேறு துறைக்கு மாற்றி விட்டார்கள். அவர் தம் எதிர்ப்பைத் தெரிவிக்கும் வகையில் மூன்று மாதம் விடுப்பில் செல்ல இருக்கிறார்.

அவளுக்கு என்ன செய்வதென்று புரியவில்லை. இன்று 'செக்ரடேரியட்' சென்றாலும் யாரையும் பார்க்க முடியாது. 'ப்ராங்க்ஃபர்ட்'டுக்கு இன்றைக்குள் 'டெலக்ஸில்' தகவல் தெரிவித்தாக வேண்டும். இல்லாவிட்டால் பல லட்சங்கள் நஷ்டம்.

இப்பொழுது என்ன செய்வது?

அவளுக்குத் துருவ் மீது கோபம் கோபமாக வந்தது. அவன் அவளுக்கு உதவியாக இருந்திருக்கக் கூடாதா? அவள் அவனிடம் எத்தனையோ தடவை சொல்லிப் பார்த்தாள். அவன் வியாபாரத்தில் தனக்கு ஈடுபாடில்லை என்று உறுதியாகச் சொல்லிவிட்டான்.

அவனுக்கு எதில்தான் ஈடுபாடு இருக்கிறது?

அவள் இப்பொழுது யாருக்காகச் சம்பாதிக்க வேண்டும்?

இந்தக் கேள்வி, பிரச்னை வரும் போதெல்லாம் அடிமனத்தைத் துளைத்தெடுக்கிறது. அவள் கணவருக்காக. அவர் ஸ்தாபித்த தொழில் நிறுவனம். அவர் பெயரை அவளுக்கு ஞாபகப்படுத்திக் கொண்டே இருக்கும். முடிந்தவரை இந்நிறுவனத்துக்காக உழைக்க வேண்டியது அவள் கடமை.

அவளுக்கு அப்பொழுது சன்னானா நினைவு வந்தது. அவன் தில்லியில் குறுகிய காலத்தில் வியாபார உலகில் அறிமுகமாகித் தன்னுடைய ஒவ்வொரு நிமிஷத்தையும் பாங்கில் பணமாக ஏற்றுகிறவன். அவனுக்குத் தெரியாத பெரும்புள்ளிகள் யாருமில்லை. எல்லா அரசியல் கட்சிகளும், தலைவர்களும் பேசுகின்ற அந்த ஒரே பாஷையை நன்றாகத் தெரிந்து கொண்டு. அதை லாகவமாக ஆளத் தெரிந்தவன்.

அவன் ஒரு சமயம் அவளை ஒரு விருந்தில் சந்தித்தான். 'மேடம்... நீங்கள் மட்டும்தான் இன்றுவரை என்னை அணுகவில்லை. வியாபார உலகில் யார் பேரையாவது சொல்லுங்கள். அவருக்குநான் உதவி இருக்கிறேன். 'பரோபகாரம் இதம் சரீரம்!'" என்று சிரித்துக் கொண்டே சொன்னான்.

அவனால் இன்றைக்குள் இதைச் செய்ய முடியுமா? முயற்சி செய்வதில் தப்பில்லை.

அவள் டைரியை எடுத்து, அவன் ஃபோன் நம்பரைப் பார்த்து, எண்களைச் சுழற்றினாள். ஒரு பெண் குரல் ஒலித்தது. "ஹா(ங்)ஜி..."

"மிஸ்டர் சன்னானா இருக்கிறாரா, என் பேர் மஞ்சுளா..."

சில விநாடிகள் தயக்கம், பிறகு அதே பெண் குரல்: "என்ன வேண்டும்?"

"வியாபார விஷயமாக அவரிடம் பேச வேண்டும்."

சிறிது நேரம் கழித்துச் சன்னானா பேசினான். "மஞ்சுளாஜி, நமஸ்கார்..."

"நமஸ்கார். உங்கள் குறை தீர்ந்து விட்டது. எனக்கு இப்பொழுது உங்கள் உதவி வேண்டும்."

"கட்டளையிடுங்கள், காத்திருக்கிறேன்."

மஞ்சுளா சுருக்கமாக விஷயத்தை அவனிடம் சொன்னாள்.

எதிர்த் தரப்பில் அவன் இருக்கிறானா இல்லையா என்ற சந்தேகம் தோன்றும்படியாக அவள் சொல்லி முடித்ததும், நீண்ட நேரம் மௌனம்.

"சன்னானாஜி... ஆர் யு தேர்?"

"எஸ்... எஸ்... யோசிக்கிறேன்... என்ன செய்யலாமென்று... உங்களுக்கு இன்றைக்குள் நடந்தாக வேண்டுமா?"

"ஆமாம்... இல்லாவிட்டால், எங்கள் கம்பெனியின் மானம் கப்பலேறிவிடும்."

"ஐ ஸீ... முயற்சி செய்கிறேன்... உறுதியாகச் சொல்ல முடியாது."

"சன்னானாஜி...நீங்கள் இப்படிச் சொன்னால் என்னாவது? நான் முதல் தடவையாக உங்கள் உதவியை நாடுகிறேன். மிக மிக, உயர் மட்டத்தில் உங்களுக்குச் செல்வாக்குண்டு என்று எனக்குத் தெரியும். அங்கிருந்து ஒரு 'டெலிஃபோன் கால்,' அவ்வளவு தான்... நாளைக்கு மஞ்சுளா தூக்கில் தொங்க மாட்டாள்."

"பேஹா(ங்)ஜி... அப்படியெல்லாம் சொல்லாதீர்கள்... உங்கள் உயிரின் மதிப்பு எனக்குத் தெரியும். என்ன செலவானாலும், அதைக் காப்பாற்ற வேண்டியது என் பொறுப்பு..." என்றான் சன்னானா.

'மை காட்!' அவ்வளவு செலவாகுமா!' என்று யோசித்தாள் மஞ்சுளா. கெட்டிக்காரத்தனமாக அதை உணர்த்தி விட்டான். ஆனால் எப்படியும் காரியம் நடந்தேறி

இந்திரா பார்த்தசாரதி

யாக வேண்டும்.

"என் உயிரின் விலை என்ன?" என்று கேட்டாள் மஞ்சுளா.

சன்னாசா அட்டகாசமாகச் சிரித்தான். "தாஜ்மஹாலின் விலை என்ன என்று கேட்பது போலிருக்கிறது உங்கள் கேள்வி. உங்கள் உயிரின் விலையை மதிப்பிட முடியாது என்பது எனக்குத் தெரியும் என்ற அர்த்தத்தில்தான் நான் பேசினேன். இன்னும் ஒரு மணி நேரத்தில் அங்கு வருகிறேன். அப்புறம் நீங்கள் குறிப்பிட்ட 'மிக மிக உயர்மட்டத்தை' நான் பார்க்கிறேன். இன்றைக்குள் காரியமாகலாம். முயற்சி செய்கிறேன்."

**து**ருவ் அறைக் கதவருகே வந்து நின்றான். அவளுக்கு ஆச்சர்யமாயிருந்தது.

"ஐ ஆம் ஸாரி ஃபார் எஸ்டர் டே" என்றான் துருவ்.

"எதைப் பத்தி?"

"'ஐ ஹேட் ஹர்'னு சொல்லியிருக்கக் கூடாது."

"அப்படின்னா?" என்று கேட்டாள் நம்பிக்கையுடன்.

"நான் யாரையும் விரும்பவுமில்லே, வெறுக்கவுமில்லே."

"அதெப்படி முடியும்? : மனித சுபாவத்துக்கே விரோதமாயிருக்கே நீ சொல்றது..."

"எனக்கே ஒண்ணும் புரியலே."

"எல்லோரையும் விரும்பக் கத்துக்கோ..."

"நான் ஏன் இப்படி இருக்கேன்னு எனக்கே தெரியலே. சுலபமா மன ரீதியா களைப்படைஞ்சுடறேன். சில சமயத்திலே அசுர வேகத்திலே என் சிந்தனை வேலை செய்யறது. மே பி. எல்லோரும் நினைக்கிற மாதிரி... 'ஐ ஆம் மென்டலி இல்...'"

"டோண்ட் பி ஸில்லி... உனக்கு 'இன்வால்வ்மென்ட்' இல்லே. எது செய்யறியோ அதிலே உன்னை உணர்ச்சி பூர்வமா ஈடுபடுத்திண்டு..." என்று மஞ்சுளா கூறுவதற்குள் அவன் இடைமறித்தான்:

"ப்ளீஸ், எனக்கு உணர்ச்சிகளே இல்லே... என் மூளை, என் இதயத்திலே இருக்கோன்னு எனக்குச் சந்தேகமா இருக்கு..."

மஞ்சுளாவுக்குச் சந்தோஷமாக இருந்தது. துருவ் அவளுடன் இதுவரை இப்படிப் பேசியதே கிடையாது.

துருவ்வின் அப்பா போன பிறகு, தொழில் நிறுவனத்தை விற்றுவிட்டு, துருவ்வுக்கு அந்த வயதில் தேவையாக இருந்த தாயன்பை அவள் கொடுக்கத் தவறி விட்டாளோ? வியாபாரம், வியாபாரம் என்று





''அந்தப் பிச்சைக்காரன் ரொம்பப் பணம் சேர்த்துட்டான் போல...''

''அதனால?''

'''ஐம்பது ரூபாய் தர்மம் பண்ணுங்க சாமி'ங்கிறான்!''

— மணியன் தர்மலிங்கம்.



''இன்னும் வெங்காயத்தை உரிக்கக் கூட ஆரம்பிக்கலே... அதுக்குள்ளே உங்க கண்ணிலே கண்ணீர் வருதே...!''

''வெங்காயத்தோட விலையை நினைச்சுக்கிட்டேன்... அழுகை வந்துடுச்சி!''

---

அலைந்திருக்க வேண்டாம். ஆனால் துருவ்வின் அப்பா அவனுக்குக் கொடுத்திருந்த முக்கியமான பொறுப்பு அது. எப்படித் தவிர்த்திருக்க முடியும்?

இன்னொரு பொறுப்பு துருவ்... ஒன்றுக்கொன்று முரண்பட்டதோ? —

''குட்மார்னிங், மேடம்.'' சன்னானா வந்து விட்டான்.

துருவ்வை மஞ்சுளா சன்னானாவுக்கு அறிமுகம் செய்து வைத்தாள்.

''ஐ ஸீ... வெரி ஹான்ட்ஸம் பாய்... உங்களுக்கு இந்த வயதில் ஒரு மகன் இருக்கிறான் என்று சொன்னால் யாரும் நம்ப மாட்டார்கள்... நீங்கள் உங்கள் கம்பெனியில் எந்தப் பொறுப்பை மேற்கொண்டிருக்கிறீர்கள், மிஸ்டர் துருவ்?''

''துருவ் இசைக்காகத் தன்னை அர்ப்பணித்துக் கொண்டிருக்கிறான்'' என்றாள் மஞ்சுளா.

''ரியலி...? நம் புது அமைச்சருக்கு இசை என்றால் உயிர். ஓர் இசை நிகழ்ச்சி ஏற்பாடு செய்யலாமே?''

மஞ்சுளாவுக்கு ஒரே பயமாக இருந்தது. துருவ் இதற்கு என்ன பதில் சொல்வானோ என்று! ஏதாவது கோபத்தில் சொல்லி விட்டானானால், ரிசர்வ் பாங்க் அனுமதியை மறந்துவிட வேண்டியதுதான்.

துருவ் ஒன்றும் பேசவில்லை. மௌனமாக நின்று கொண்டிருந்தான். முகத்தில் ஒரு புன்னகையின் சாயை லேசாகப் படர்ந்தது.

''ஹிந்துஸ்தானியா, கர்னாடிக்கா? அமைச்சருக்கு இரண்டும் பிடிக்கும்... அவரே ஒரு காலத்தில் இசைக் கலைஞராக ஆக வேண்டுமென்றுதான் விரும்பினாராம். ஆனால்...''

''இது இசையின் அதிர்ஷ்டமா, இல்லாவிட்டால், அரசியலின் துரதிர்ஷ்டமா?'' என்று கேட்டான் துருவ்.

''ஏது?''

துருவ் பதில் கூறாமல் போய் விட்டான்.

''அவர் என்ன சொன்னார்?'' என்று மஞ்சுளாவைக் கேட்டான் சன்னானா.

''நம் விஷயத்துக்கு வாருங்கள்...'' என்றாள் மஞ்சுளா.

''நீங்கள் அதிர்ஷ்டசாலி... காரியம் முடிந்த மாதிரிதான். உங்களுக்கு இது நடந்தேறாவிட்டால் எத்தனை நஷ்டம் ஏற்பட்டிருக்கும்?''

''பதினெட்டு லட்சம்.''

''குட்... இப்பொழுது நஷ்டம் அதில் பாதிதான்... உங்கள் மானம் கப்பலேறவில்லையே. அதைச் சொல்லுங்கள், பணமா முக்கியம்?''

அவன் எழுந்தான். ''ஒன்று சொல்லலாமா? உங்கள் மகனையும் தொழிலில் ஈடுபடுத்தி விடுங்கள். வியாபாரத்துக்கு வேண்டுமானால் இசை ஞானத்தைப் பயன்படுத்தலாமேயன்றி, இசைக்காக வாழ்க்கையை விரயமாக்கிக் கொள்வது முட்டாள்தனம். அதுவும் இன்றையச் சூழ்நிலையில்...''

சன்னானா போன பிறகு, துருவ் வந்தான்.

''இப்போ வந்த 'கேரக்டர்' யாரு?''

''கான்டாக்ட் மேன். தவிர, இவனுக்கும் பிஸினஸ் இருக்கு.''

''இந்த மாதிரி ஆட்களை உன்னாலே எப்படிப் பொறுத்துக் கொள்ள முடியறது. ஐ பிட்டி யு, ரியலி.''

''என்ன செய்யறது? இதுதான் பிஸினஸ்...''

துருவ் சிறிது நேரம் அவளைப் பார்த்துக் கொண்டே நின்றான். பிறகு வெளியே வந்து, காராஜிலிருந்த தன் ஃபியட் நோக்கி

நடந்தான். அம்மாவின் அம்பாஸிடர் அருகே நின்றது. அதைப் போர்ட்டிகோவில் நிறுத்திவிட்டு வந்து, பிறகு தன் 'ஃபியட்'டைக் கிளப்பினான் துருவ்.

**தி**ல்லிப் பல்கலைக் கழகம் சென்று ரகுவைப் பார்க்க வேண்டும். அவன் நூல் நிலையத்திலிருந்து இசையைப் பற்றிப் பதினெட்டாம் நூற்றாண்டில் ஜெர்மன் மொழியில் எழுதப்பட்ட ஒரு புத்தகத்தின் ஆங்கில மொழி பெயர்ப்பை வாங்கி வைப்பதாகச் சொல்லியிருந்தான்.

ஜெர்மனியில் இசையும், விஞ்ஞானமும் சீராக வளர்ச்சி பெற்று வந்திருக்கின்றன.

இசையை அனுபவிக்கத் தெரியாதவன் சதிகாரனாகவும் கொலைகாரனாகவும் இருப்பான் என்று ஷேக்ஸ்பியர் சொல்லியிருப்பது அவன் நினைவுக்கு வந்தது.

ஆனால் இரண்டாம் உலகப் போரில் ஏற்பட்ட விஞ்ஞானச் சாதனை, நூற்றுக்கணக்கான யூதர்களை ஒரே கணத்தில் 'காஸ் சேம்பரில்' போட்டு எப்படிக் கொல்வது என்பதுதான்.

அவ்வாறு யூதப் பெண்களையும் குழந்தைகளையும் கொல்வதற்காக, அழைத்துச் செல்லும் போது, நாஜி வீரர்கள் 'வாக்னர்' இசையைக் கேட்டு மகிழ்ந்து கொண்டிருப்பார்களாம்!

இசையும் விஞ்ஞானமும் சீராக வளர்ச்சி அடைந்திருந்தன என்பதற்கு இதைவிட வேறு என்ன உதாரணம் வேண்டும்?

ஹிட்லருக்கு 'வாக்னர்' இசை என்றால் மிகவும் பிடிக்குமாம்....

'வாக்னர்' இசைக்கும், நாஸிஸப் பரிணாம வளர்ச்சிக்கும் என்ன சம்பந்தம்?'

தில்லி பல்கலைக் கழகத்தில் விவேகானந்தர் சிலையருகே ரகு நின்று கொண்டிருந்தான்.

"இன்னிக்குத்தான் சொன்ன டயத்துக்குக் கரெக்டா வந்திருக்கே..." என்றான் ரகு.

துருவ் புன்னகை செய்தான். துருவ்வுக்கு ரகுவைத் தவிர வேறு நண்பர்கள் யாருமில்லை.

"ஹிட்லருக்கு 'வாக்னர் மியூஸிக்'னா ரொம்பப் பிடிக்குமாம். இசைக்குப் கொலைகாரனா ஆகறதுக்கும் எதாவது சம்பந்தம் உண்டா?"

"உனக்கு அப்படி எதாவது இஷ்டம் உண்டா?" என்று கேட்டு விட்டுச் சிரித்தான் ரகு.

"எனக்கா? ஒரு 'லாங் லிஸ்ட்' இருக்கு..."

"என்ன லிஸ்ட்? யார் யாரைக் கொல்லணும்னா?"

"ஆமாம்... ஒண்ணு, அல்ப சந்தோஷிகள், ரெண்டு... ரெண்டு..." என்று திருப்பத் திருப்பச் சொல்லிவிட்டு, பிறகு குரலைச் சற்று உயர்த்திச் சொன்னான்: "பாக்கப் போனா எல்லாமே இந்த அல்ப சந்தோஷம் என்கிறதிலே அடங்கிடும். என்ன மனுஷங்க... செக்கு மாட்டுத்தனத்தைச் சொர்க்கமா நெனைக்கிற சாமானிகள்தான் எல்லாரும்..."

"யு ஆர் பிகமிங் க்ரேஸி" என்றான் ரகு.

"ஓ.கே. புஸ்தகம் எங்கே?"

ரகு அவனிடம் தன் பையைத் திறந்து புத்தகத்தை எடுத்துக் கொடுத்தான். துருவ் அதைப் புரட்டிப் பார்த்தான். "இன்டரெஸ்டிங் புக். டாட்... ஆராய்ச்சிப் புத்தகம் மாதிரி என் எழுதித் தொலைக்கிறாங்க. அடிக்குறிப்பும் அனுபந்தமுமா...? பார்க்க எரிச்சலா இருக்கு."

ஒரு பக்கமாக மாணவர்கள் புல்வெளியில் குழும ஆரம்பித்தனர்.

"அங்கே என்ன நடக்கிறது?" என்று கேட்டான் துருவ்.

"ஐ திங்க்... 'ஸம் ஸ்ட்ரீட் ப்ளே...' இப்போ தில்லியிலே தெரு நாடகங்கள் நெறைய நடக்கிறது... எல்லாம் சமூகப் பிரச்னைகள் பற்றி..."

துருவ் தொடர்ந்து அந்தத் திசையையே பார்த்துக் கொண்டிருந்தான். இது ரகுவுக்கு ஆச்சரியத்தைத் தந்தது. சாதாரணமாக இந்த மாதிரி விஷயங்களில் துருவ்வுக்கு ஈடுபாடு கிடையாது.

அவன் ஏன் அப்படிப் பார்க்கிறான் என்பதற்குக் காரணம் ரகுவுக்குச் சிறிது நேரத்தில் விளங்கிற்று. அங்கு சந்தியா நடுநாயகமாக நின்று கொண்டிருந்தாள்!

(தொடரும்)

## மதிப்புக்குரிய எங்கள் ஆசிரியர்

**நீ**ங்கள் மாணவர் என்ற முறையில் எத்தனையோ ஆசிரியர்களைச் சந்தித்துப் பழக நேர்ந்திருக்கும். அனைவரிலும் ஒருவர்தான் உங்கள் மதிப்பில் மிக அதிகமாக உயர்ந்திருப்பார். அவர் யார்? எதனால் அந்தச் சிறப்பிடத்தை அவர் பெற்றார்? ஓரிரு சம்பவங்களைக் கூறி எழுதப்படும் சிறந்த ஒரு பக்கக் கட்டுரைக்குப் பரிசு ரூ. 50/–. பிரசுரமாகும் சிந்தனைச் சிதறல்களுக்கும் ஆறுதல் பரிசு உண்டு. கல்லூரி முகவரி குறிப்பிட்டு எழுதக் கடைசித் தேதி: 2.2.91.

நினைவிருக்கட்டும்; மிக அதிகமான முதல் பரிசு பெறும் மாணவருக்குப் பொன் விழா மேடையில் ரூ. 2500 கௌரவப் பரிசு!

**கல்கி பொன்விழா பரிசுத் திட்டம்**



**கல்லூரி மாணவர் கட்டுரைப் போட்டி**



ஐன்ஸ்டைன்

கல்லூரி மாணவர்
கட்டுரைப் போட்டி




# அழகு தமிழில் அறிவியல்

## ரூ. 50 முதல் பரிசுக் கட்டுரை

இந்த நூற்றாண்டின் புரட்சிகாமான விஞ்ஞானக் கொள்கைகளுள் ஒன்று அறிஞர் ஐன்ஸ்டைனின் 'சார்புக் கொள்கை'. இது பல பழைய கொள்கைகளை உடைத்தெறிந்தது.

'சார்புக் கொள்கை' என்பது என்ன என்பதைக் கவனிக்கு முன் 'இயக்கம்' என்றால் என்ன என்று பார்ப்போம்.

ஒரு பொருளின் 'நிலை'யானது, மற்ற பொருட்களைப் பொறுத்து மாறுபடுமானால் அப் பொருள் 'இயக்கத்'தில் உள்ளது எனலாம்.

ஆனால் இந்த 'இயக்கத்'தின் வகையானது பார்ப்பவரின் நிலையைப் பொறுத்து மாறுபடும்.

உதாரணமாக, நீங்கள் இரயில் வண்டியில் செல்கிறீர்கள். இரயில் நகர்ந்து கொண்டிருக்கையில், நீங்கள் நகர்ந்து கொண்டிருப்பதாக, இரயில் வண்டிக்கு வெளியே இருப்பவர் கூறுவார். ஆனால் உங்கள் பக்கத்தில் பயணம் செய்பவரோ நீங்கள் 'சும்மா' இருப்பதாகவே கருதுவார்.

எனவே, இந்தப் பிரபஞ்சத்திலுள்ள 'இயக்கம்' யாவும் 'சார்பு இயக்கமே' ஆகும். அதாவது, ஒரு பொருளின் 'இயக்கம்' அல்லது 'ஓய்வு' என்பது, மற்ற பொருட்களைச் சார்ந்துள்ளது.

ஐன்ஸ்டைன் இவ்வகை 'இயக்கம்' பற்றி ஆராய்ந்தார். அவருடைய சார்புக் கொள்கை இரு பிரிவுகளைக் கொண்டுள்ளது.

1. சிறப்புக் கொள்கை (Special theory of relativity)

2. பொதுக் கொள்கை (General theory of relativity)

ஐன்ஸ்டைன் தமது சிறப்புக் கொள்கையில் "இந்தப் பிரபஞ்சத்திலுள்ள இயக்கங்கள் யாவும் சார்பு இயக்கங்களே" எனவும், "இந்தப் பிரபஞ்சத்திலுள்ள எல்லாப் பொருட்களும் 'இயக்கத்தில்' உள்ளன; எனவே, இயக்கமில்லாமல் அதாவது 'முழு ஓய்வு' நிலையில் எந்தப் பரிசோதனையும் செய்ய இயலாது" எனவும் கூறியுள்ளார்.

'புலங்கள்' பற்றி மேலும் ஆராய்ந்த ஐன்ஸ்டைன் 'புவியீர்ப்பு' என்பதாக ஒரு 'புலம்' இருப்பதை மறுத்தார்.

"ஒரு சரியான ஒப்பீட்டுச் சட்டத்தை (Frame of reference) தேர்ந்தெடுத்துக் கொள்வோமானால், புவியீர்ப்பின் பாதிப்புக்களை இல்லாமல் செய்து விட முடியும்" என்று உறுதியாக நம்பினார்.

அவர் ஐசக் நியூட்டனின் 'புவியீர்ப்பு விதி' 'தோராயமானது' (approximate) ஒன்று என்று கருதினார்.

மேலும், "ஒரு பொருளின் நிறையானது, அதன் வேகத்தோடு சம்பந்தப்பட்டது அன்று" என்ற நியூட்டனின் கருத்தை மறுத்தார்.

ஐன்ஸ்டைனின் கருத்துப்படி, ஒரு பொருள் ஒளியின் வேகத்தில் பயணம் செய்யுமானால், அதன் நிறை நினைத்துப் பார்க்கவும் இயலாத அளவு (infinite) அதிகமாகும் என்று நிரூபித்தார்.

மேலும், ஒளி வேகத்தில் செல்லும் ஒரு பொருளின் நீளம் 'பூஜ்யம்' என்றார்.

அதாவது நீங்கள் ஒளி வேகத்தில் ($3 \times 10^5$ kms) பயணம் செய்வதாக இருந்தால், உங்கள் உயரம் பூஜ்யம்!

மேலும் $E = mc^2$ என்னும் சமன்பாட்டை உருவாக்கினார். அதாவது 'm' நிறையுள்ள ஒரு பொருள் $m \times 9 \times 10^{10}$ அளவு சக்தியைத் தரக்கூடும்.

இவரது சார்புக் கொள்கை நீளம், நிறை, காலம் முதலிய அடிப்படை அளவுகளைத்

தகர்த்தெறிந்தது. மேலும், அவற்றின் 'மாறாத்' தன்மையையும் உடைத்தது. இவரது கொள்கை, நெடுங்காலமாக இயற்பியலில் விதிகளாக விளங்கிய 1) பொருண்மை மாறா விதியையும் 2) ஆற்றல் மாறா விதியையும் உடைத்தெறிந்து, புதிய உலகத்தினைப் படைத்து, ஆட்சி செய்து கொண்டிருக்கிறது.

— என். முருகேஷ்.
குரு நானக் கல்லூரி,
சென்னை — 32.

## சூரிய சக்தியிலிருந்து மின்சாரம்

நீர் விசை மின் உற்பத்தி முறையைத் தவிர (Hydro electric power generation) ஏறத்தாழ பிற அனைத்து முறைகளிலும் நீராவியின் விசையைப் பயன்படுத்தி, மின்னாக்கிகளுடன் (Generators) இணைக்கப்பட்ட சுழலிகளைச் (Turbines) சுழலச் செய்துதான் மின்சாரம் உற்பத்தி செய்யப்படுகிறது. சூரிய சக்தியிலிருந்தும் இங்ஙனமே மின்சாரம் உற்பத்தி செய்யப்படுகிறது. ஆனால் இம்முறையில், விசை மிகு நீராவியை உருவாக்கும் விதம் பிற முறைகளிலிருந்து மிகவும் வேறுபட்டிருப்பதுடன் எளிமையானதும் கூட!

மேல்நிலைக் குடிநீர்த் தொட்டிகளைப் போன்று உயரமான கோபுரங்களில் அமைக்கப்பட்ட நீர் நிரப்பப்பட்ட உலோகத் தொட்டிகளைச் சுற்றிலும் சமதரையில் 'Heliostates' எனப்படும் மாபெரும் எதிரொளிப்புக் கண்ணாடிகள் பல வரிசைகளாகப் பொருத்தப்பட்டிருக்கின்றன. இவை கணிப்பொறி (Computer) மற்றும் தானியங்கு அமைப்புகளுடன் பொருத்தப்பட்டிருப்பதால் சூரியன் நகரும் திசைக்கு ஏற்ப மாபெரும் சூரியகாந்திப் பூக்களைப் போல நகர்கின்றன. அதே சமயம் சூரிய ஒளியை நீர் நிறைந்த கோபுரத் தொட்டிகளின் சுவரில் எதிரொளித்துக் குவிக்கின்றன. இவ் வெப்பத்தில் உருவாகும் விசை



சூரிய சக்தியில் மின் உற்பத்தி.

மிகு நீராவி தனிக் குழாய்களின் வழியே கொணரப்பட்டு நிலத்திற்குக் கீழ் அமைக்கப்பட்ட (Underground power station) மின்னாக்கிகளுடன் இணைக்கப்பட்டுள்ள சுழலிகளை அதிவேகமாகச் சுழற்றும்படி விடப்படுகின்றன. மின்னாக்கி சுழன்று மின்சக்தி கிடைக்கிறது!

— வி. வானமாமலை கார்த்திகேய சங்கர்,
பி. ஏ., மூன்றாம் ஆண்டு,
பொருளியல் துறை,
புனித சேவியர் கல்லூரி,
பாளையங்கோட்டை,
திருநெல்வேலி மாவட்டம்.

## அணுக்கரு இணைப்பு

அணு பிளவுறும் பொழுது அதிகமான வெப்ப ஆற்றல் உருவாகிறது. இதனைக் கொண்டு நீர், ஆவியாக்கப்பட்டு அது ஜெனரேட்டர்களை இயக்க, மின்சாரம் தயாரிக்கப்படுகிறது. அணு பிளவுறும் பொழுதும், பிளவுற்ற பிறகு எஞ்சிய கழிவுகளும் கதிர்வீச்சுத் தன்மையுடையவை. இந்தக் கதிர் வீச்சின் நச்சுத் தன்மை அனைத்து உயிர்களுக்கும் அதிகமான பாதிப்பை ஏற்படுத்துகிறது. எனவேதான் அழிவுக்கு அணுகுண்டு தயாரிப்புக்கு மட்டுமின்றி ஆக்கபூர்வமாக அணுசக்தி மூலம் மின்சாரத் தயாரிப்புக்கும் எதிர்ப்புக் கிளம்பியிருக்கிறது.

அணுவைப் பிளக்கும் போது மட்டுமின்றி அணுவில் உள்ள உட்கருவை ஒன்றுடன் ஒன்று இணைக்கும் பொழுதும், அணுவானது அதன் நிறையில் மிக மிகச் சிறிய அளவில் மாறுபட்டு, அந்நிறை ஆற்றலாக மாற்றப்படுகிறது. இந்த ஆற்றல் மிக மிக வலிமையானது.

அணுக்கரு இணைப்பின் போது கதிர் வீச்சு வெளிவருவதில்லை! சூரியனில் நடைபெறும் வினை அணுக்கரு இணைப்பே! அணுக்கரு இணைப்பு சோதனைச் சாலையில் சாத்தியமாகி விட்டதாகக் கூறப்படுகிறது. இதில் மேலும் ஆய்வுகள் நடந்து தொழில் ரீதியில், குறைந்த செலவில் அணு இணைப்பு நடத்தக் கூடுமானால் ஏராள ஆற்றல் உருவாகி மின்சாரத் தட்டுப்பாடு என்பதே உலகில் இல்லாமல் மறைந்து விடக் கூடும். கதிர்வீச்சு பற்றிய கவலையும் இராது. ஆனால் அந்த நாள் இன்னும் வெகு தூரத்தில்தான் உள்ளது!

— வி. ஜ. பார்த்திபன்,
இளம் அறிவியல் இரண்டாம் ஆண்டு
(இயற்பியல் துறை),
பச்சையப்பன் கல்லூரி,
சென்னை — 30.

# சிகரங்களை நோக்கி...

(15)

விஞ்ஞானியின் கண்களில் மனிதப் பசையே இல்லை. அதில் பழிவாங்கும் புலியின் கண்களின் பளபளப்பு தெரிந்தது.

அவர் உச்சரித்த வார்த்தைகளின் உஷ்ணத்தில் — ஒரு மரம் ஆணிவேரோடு அசைவது போன்ற அவரது ஆவேச அசைவுகளில் — பறவைகள் கூண்டுக்குள் படபடத்தன. பூகம்ப வாசனை கண்டால் அடிவயிற்றில் அடிக்குமாமே பறவைகள்! அப்படி இருந்தது அது.

கூண்டுக்குள் ஓடி ஓடித் தப்பிக்க நினைத்து, ஒன்றோடொன்று முட்டிக் கொண்டன முயல்கள்.

அந்தச் சூழ்நிலையில் மெழுகுவர்த்தி அச்சத்தை அதிகமாய் அழுதது.

அங்கே மையங்கொண்ட ஒரு புயலை திருஞானத்தால் நிர்ணிக்க முடியவில்லை.

கொதிக்கும் உலையில் தெறிக்கும் துளிகளாய் அவன் உஷ்ண வார்த்தைகளை உமிழ்ந்தான்.

''உங்கள் கண்களின் மனிதநேசம் எங்கே? உங்கள் இதயத்தை மட்டும் ஏதாவது ஓர் அமிலம் எரித்து விட்டதா?

ஏன் இந்த உக்கிரம்?
ஏன் இந்த வக்கிரம்?

உங்கள் மூளை என்ன உங்கள் ஆடைகளை விடவும் கசங்கிப் போனதா?

உங்களைக் கண்டு இந்த ராத்திரியின் முகம் இன்னும் கறுத்து விட்டது.

உங்களைக் கண்டு அஃறிணைகளும் கூட அச்சப்படுகின்றன.''

விஞ்ஞானி சிரித்தார். அந்தச் சிரிப்பில் ஜீவனில்லை.

சித்திரை மாதத்து ஏரித் தரைகள் பாளம் பாளமாய் வெடித்துக் கிடப்பது மாதிரி தெரிந்தது அவரது வறட்டுச் சிரிப்பு.

''இனி அஃறிணைகள் மட்டுமல்ல — என்னைக் கண்டு இந்த அண்டமே அஞ்சும்.

காற்று என்னைக் கண்டு கைகட்டும். என் காலடிச் சத்தம் கேட்டால் கடல் வாய் பொத்தும்.

இனி என் கடிகாரம் நின்று போனால் காலமே நின்று போகும்.

என் சுண்டுவிரல் கண்டு வானம் வந்து மண்டியிடும்.

மனிதகுலத்தின் ஆயுள்ரேகையே இப்போது என் உள்ளங்கையில் ஓடிக்கொண்டிருக்கிறது அந்நியனே.''

''நீங்கள் மாறி விட்டீர்கள்.''

''இல்லை! மாற்றப்பட்டேன். நுண்ணுயிர்கள் பாலைத் தயிராய்த் திரித்து விடுவது மாதிரி, சில மனிதர்கள் என்னுள் ஓடிய மனித ரத்தத்தை விலங்கு ரத்தமாய்த் திரித்து விட்டார்கள்.

இப்போது இந்த பூமியின் மனிதகுலத்தையே துடைத்தெடுத்து விடும் நுண்ணுயிர்கள் என் கையில்.''

தீ வைத்த வெடியாய்த் திருஞானம் கத்தினான்.

''இது அறிவின் அநாகரிகம். இதுவரை நுண்ணுயிர்களை ஏவல் கொண்டது ஆக்கத்திற்கு மட்டும்தானே?''

''இல்லை. அழிவுக்குப் பயன்படுத்தப் பட்டது உங்கள் அறிவுக்கு எட்டவில்லை.

சரித்திரத்தின் போர்க்களங்களில் உயிர்களோடு சேர்த்துச் சில உண்மைகளும் கொல்லப்பட்டு விட்டன.
கேள் அந்நியனே! கேள்!

நுண்ணுயிர்களின் நுட்பம் சொல்கிறேன்: பிரிட்டிஷ்காரர்கள் அமெரிக்கச் செவ்விந்தியர்களை அடிமை கொண்ட கதை அறிவாயா நீ?''

''அறியேன்.''

''ஆதி அமெரிக்கா செவ்விந்தியர்களின் தொட்டில் பூமி. தோளை வில்லாகவும் கரங்களை அம்புகளாகவும் கொண்ட சிவப்பு மறவர்கள் அவர்கள். அவர்களை புஜங்களால் வெற்றி கொள்ள முடியாத பிரிட்டிஷ்காரர்கள் போர்வைகளால் வெற்றி கொண்டார்கள்.''

''போர்வைகளால் போர்களா?''

''ஆமாம்.

வைரமுத்து

பிரிட்டிஷ்காரர்கள், செவ்விந்தியர்கள்
போர்த்துக் கொள்ளப் போர்வை
கொடுத்தார்கள்.

அந்தப் போர்வைகளே அவர்களின்
சவத் துணிகளாயின.''

''எப்படி...? எப்படி?''

''அந்தப் போர்வைகளெல்லாம் பெரியம்மை
கண்டவர்கள் போர்த்திருந்த போர்வைகள்.
அதிலிருந்த கிருமிகளால் பெரியம்மை
கண்டு செவ்விந்தியர்கள்
சிதைந்து போனார்கள்.''

''கொடுமை! கொடுமை!''

''கொடுமை என்பது சரித்திரத்தின்
கிரீடத்தில் ஒரு கல்.

நெப்போலியனின் 'இத்தாலி யுத்தம்'
தெரியுமா உனக்கு?''

''தெரியாது.''

''இத்தாலியின் ''மன்த் வா'' கோட்டையை
அவன் ஆயுதங்களால் வீழ்த்தவில்லை;
அறிவால் வீழ்த்தினான்.''

''எப்படி?''

''மன்த் வா கோட்டையைச் சுற்றி நீர்
நிரப்பினான். நீரில் மனிதர்களைத் தின்னும்
மலேரியா வளர்த்தான். மாவீரர்களுக்குச்
சாயாத நகரம் மலேரியாவிற்குச்
சாய்ந்தது.''

''ஆச்சரியம்; ஆச்சரியம்.''

''அறிவைப் போல் ஆச்சரியம் அவனிமிசை
இல்லையப்பா.

உனக்குப் பிணங்களை வைத்துப்
பிணமாக்கும் உத்தி தெரியுமா?''

திருஞானம் திகைத்து ''தெரியாது''
என்றான்.

''சில கோட்டைகளை முற்றுகையால்
மட்டும் முறியடிக்க முடியாது.

முள்ளம்பன்றி தன் தலையை மடித்து
முள்ளுக்குள் வைத்து மூடிக் கொள்வது
மாதிரி முற்றுகைக் கோட்டைக்குள்
இருப்பவர்கள் முகங்காட்ட மாட்டார்கள்.

அவர்களை பீரங்கிகளால் வெற்றி
கொள்வதை விடவும் பிணங்களால்
வெற்றி கொள்வது சுலபம்.''

''எப்படி...? எப்படி என்கிறேன்.''

''செத்த பிணங்களையும் குதிரைகளையும்
எந்திர வில்லில் வைத்துக் கோட்டைக்குள்
அடிப்பார்கள். பிணங்கள் 'பிளேக்' பரப்பும்.
கோட்டை சரிவதற்கு முன்பே அதைக்
கட்டியவர்கள் சரிவார்கள்.''

''அநியாயம்! அநியாயம்!''

''நீ அநியாயம் என்கிறாய்!
போர்க்களத்தில் அதுதான் ராஜதந்தி
ரத்தின் புனைபெயராக இருக்கிறது.
உனக்குத் தெரியுமா...? அமெரிக்கப் போர்
விமானங்கள் வியட்நாமியக் கொரில்லாக்க
ளோடு விளையாடிய கதை?''

''தெரியாது.''

''வியட்நாமியக் கொரில்லாக்கள்
அடர்ந்த காடுகளில் அடைக்கலமானார்கள்.
செறிந்த காடு அது.

சூரிய கிரணங்களும் மழைத் துளிகளும் கூட
உத்தரவில்லாமல் உள்ளே போக முடியாது.

அங்கே பதுங்கியிருந்த கொரில்லாக்களைக்
கொல்ல அமெரிக்கப் போர் விமானங்கள்
அலைந்தன; காடுகள் மேலே பறந்தன.

இலைகளை அன்றித் தலைகள்
தெரியவில்லை. எப்படிக் கண்டறிவது?

காடுகளைத் துகிலுரிவது என்ற கடும்
முடிவுக்கு வந்தார்கள்.

விமானத்தில் பறந்து காடுகள் மீது
நுண்ணுயிர்கள் தூவினார்கள்.

நுண்ணுயிர்கள் எல்லா இலைகளையும்
தின்று முடித்து இலையுதிர்காலம்
ஏற்படுத்தின; மரங்கள் உயரமான
நிர்வாணங்களாய் நின்றன.

நுண்ணுயிர்கள், இலைகளைத் தின்று
தலைகளைக் காட்டின.''

''ஓ! நுண்ணுயிர்களால் இத்தனை
அழிவுகளா...?''

''கொஞ்சம்; இது கொஞ்சம்.

இதுவரை சொன்னதெல்லாம் நுண்ணுயிர்
களின் சின்னச் சின்னத் தும்மல்கள்.

இப்போது நான் கண்டறிந்திருப்பது
நுண்ணுயிர்களின் பூகம்பம்.

இந்த பூமியை இனிமேலும் மனிதனுக்கு
விட்டுக் கொடுக்கலாமா வேண்டாமா
என்பதை நான்தான் தீர்மானிக்க
வேண்டும்.

இந்தப் பிரபஞ்சத்தைப் படைத்தவன் பற்றிச்
சர்ச்சை இருக்கிறது.

அழிப்பவன் பற்றிச் சர்ச்சையே இல்லை.

நான்தான்! நானேதான்!''

விஞ்ஞானி வெறிகொண்டு சிரித்தார்.

ஆவேசம் கொண்டு ஆடினார்.

சட்டென்று பாய்ந்து முயற்கூண்டு திறந்தார்.

இரண்டு முயல்களைக் காதுகள் பற்றிக்
கைப்பற்றினார். முயல்களைப் பார்த்து
முரட்டுத்தனமாய்ச் சிரித்தார்.
திருஞானத்தின் மீது நெருப்புப் பார்வை
வீசி விட்டு, முயல்களோடு, புற்றுக்குள்
தலைவிழுந்துக் கொண்ட பாம்பாய்
பூமிக்குள் போய் விட்டார்.

●

நடந்தது நனவா...? இல்லை, மெழுகுவர்த்தி
வெளிச்சத்தில் கண்ட கனவா?

கனாவில் சிங்கம் துரத்த ஓட முடியாமல்
தத்தளிக்கும் ஒரு சிறுவனாய்
முகங்கறுத்து மூச்சு முட்டியது

 

சென்னை தங்க சாலையில் உள்ள

# அருள்மிகு ஏகாம்பரேசுவரர் ஆலயம்

# ராஜ கோபுரம்

## அமைப்புப் பணி

## நன்கொடை வேண்டுகோள்

**ராஜ கோபுரம் கட்டுவதற்கு உதவ, இதோ உங்களுக்கு ஒரு வாய்ப்பு.**

நன்கொடைகள் ரூ. 500/-ன் மடங்குகளில் பெற்றுக் கொள்ளப்படும். இவ்வாறு பெறப்படும் ஒவ்வொரு 500 ரூபாய் நன்கொடைக்கும், ஐந்து ஆண்டுகளின் முடிவில் ரூ. 500 பெறத்தக்க மதிப்புக்கு இந்திரா விகாஸ் பத்திரங்கள், இறைபணி மன்றத்தினரால் அனுப்பி வைக்கப்படும்.

ஆகவே, அன்பர்களுக்கு, ஆண்டவன் திருப்பணியில் பங்கு பெறும் வாய்ப்பு கிடைப்பதோடு மட்டுமல்லாமல் நன்கொடையாக அளித்த பணமும் 5 ஆண்டுகளுக்குப் பிறகு திரும்பக் கிடைத்திடும். நன்கொடையாளர்களுக்கு, நன்கொடைச் சீட்டும், அருள்மிகு காமாட்சி அன்னையின் வெள்ளி டாலரும், இறைபணி மன்றத்தினரால் நேரடியாக அனுப்பி வைக்கப்படும்.

கும்பாபிஷேக தினத்தன்று நன்கொடையாளர்களுக்கென அதிர்ஷ்டக் குலுக்கல் ஒன்று, இறைபணி மன்றத்தினரால், இதற்கென அமைக்கப்பட்ட குழுவின் மேற்பார்வையில் நடத்தப்பட்டு, ஒவ்வொரு வரிசைக்கும் கீழ்க்கண்ட அட்டவணைப்படி பரிசுகள் வழங்கப்படும்.



அதிர்ஷ்டக் குலுக்கல் பரிசுகள்
(ஒவ்வொரு வரிசைக்கும்)

| பரிசு | விவரம் |
|---|---|
| முதல் | 1 மாருதி கார்/வேன் |
| இரண்டாவது | 1 கைனடிக் ஹோண்டா ஸ்கூட்டர் |
| மூன்றாவது | 3 கலர் டெலிவிஷன்கள் |
| நான்காவது | 7 ரெப்ரிஜரேட்டர்கள் |
| ஐந்தாவது | 35 சுமீத் மிக்ஸிகள் |
| ஆறாவது | 100 வாட்டர் ஃபில்டர்கள் |

திருப்பணியில் நீங்களும் பங்கு பெற்று, இறையருள் பெற வேண்டுகிறோம்.
நன்கொடைகள், தமிழ்நாட்டிலுள்ள **இந்தியன் வங்கி**யின் எல்லாக் கிளைகளிலும் பெற்றுக் கொள்ளப்படுகின்றன.

ஆண்டவன் சேவையில் என்றும் இருக்கும் -
இறைபணி மன்றம் - ஹரி ஓம் மண்டல்
151-A, தங்கசாலை, சௌகார்பேட்டை, சென்னை 600 079.

திருஞானத்துக்கு.

பறவைகளும் முயல்களும் வெள்ளெலிகளும்
அந்திம நிமிஷம் கண்டதுபோல்
அச்சத்தில் அடித்துக் கொண்டன.
மெழுகுவர்த்தியின் மெல்லிய சுடரும் அவன்
உயிரைப் போல் நடுங்கியது.

''முகத்தில் என்ன முத்துமுத்தாய்
வியர்வை...? விழித்துக் கொண்டே
கெட்ட கனவா?''

ஓசையில்லாமல் உள்ளே வந்த ஓவியா
கேட்டாள்.

''ஒன்றுமில்லை! ஒன்றுமில்லை!''
மீன் குஞ்சுகளை மீனே சாப்பிடுவது மாதிரி
தன் வார்த்தைகளைத் தானே தின்றான்.

எரிமலைக் குழம்பை இலவம்பஞ்சால்
துடைக்க முடியுமா?

அவன் ஒன்றை மறைக்கிறான் என்பதை
அவனால் மறைக்க முடியவில்லை.

அவன் திசைமாற்றினான்.

''உனக்கென்ன ஓவியா...? மேகம் உட்கார்ந்த
நிலவாய் உன் முகத்தில் சோகம்
உட்கார்ந்திருக்கிறதே!''

அந்த இளைய நிலவு இன்னும்
இருளுண்டது.

''மழைக்காலத்து மலைச் சாலையாய் இன்று
முதியோர் பள்ளி வெறிச்சோடிக்
கிடந்தது.''

''ஏன்?''

''ஊருக்குள் பதினாறு பெண்கள் கைது
செய்யப்பட்டிருக்கிறார்கள்.''

''கைதா?''

''ஆமாம்!
வளையல்கள் இல்லாத கைகளில்
விலங்குகளேனும் ஆபரணங்களாய்
விளங்கட்டும் என்றுதான்.''

''காரணம்?''

''புல்லறுத்து வந்த பெண்கள் புல்லுக்குள்
கஞ்சா கடத்தினார்களாம்.''

உண்மையாகவா என்று கேட்கத்
திருஞானம் வாய் திறந்தான்.

அதற்குள் அவர்கள் காலடியில்
வீசியெறியப்பட்ட இரண்டு முயல்கள் வந்து
விழுந்தன.

உயிர் பதறிப் போய் இருவரும்
ஆளுக்கொரு முயலை வாரி எடுத்தார்கள்.

அந்த முயல்களின் காதுவழி ரத்தம் —
மூக்குவழி ரத்தம் — கண்கள் வழி ரத்தம்—
உடம்பெல்லாம் ரத்தம்.

வெண்பட்டு மேனி செம்பட்டாய் மாறியது.

முயல்களின் உயிர்கள் கண்களின் வழியே
கரைவது தெரிந்தது.

— இன்னும் செல்வேன்

---

0 கே. ஆர். நாதன், கோயமுத்தூர் — 1.

• என் தாத்தாவுக்கும், என் அப்பாவுக்கும் நீரிழிவு நோய் உள்ளது. எனவே எனக்கும் வரும் என்று கூறுகிறார்கள். இந்நோய் பரம் பரை நோயா? மேலும் நீரிழிவு நோய் எத்தனை வயதுக்குட்பட்டவர்களுக்கு (குறைந்த பட்சம்) வரும்? நீரிழிவு நோயைக் கட்டுப் படுத்த மட்டுமே முடியும்; பூரணமாகக் குணப்படுத்த முடியாது என்பதும் உண்மையா?

00 டாக்டர் சந்திரசேகர சாண்டில்யா, சென்னை — 28:

நீரிழிவு நோய் என்பது பரம்பரையாக வரும் வியாதிதான். தாயும், தந்தையும் இந்த நோயால் பாதிக்கப்பட்டவர்களாக

# நீரிழிவு நோயைக் குணப்படுத்த முடியுமா?

இருந்தால், கண்டிப்பாகக் குழந்தைக்கும் வரும். பெற்றோரில் ஒருவருக்கு மட்டும் இருந்தால், பிள்ளைக்கு ஒரு வேளை வராமலும் இருக்கலாம். ஜுவைனைல் டயபடிஸ் என்னும் ரகம், குழந்தைப் பருவத்திலேயே வரும். இதற்கு இன்சுலின் ஊசி மருந்து போட்டே ஆக வேண்டும். 25—30 வயதுக்கு மேல் வரும் ரகம் (Maturity Onset Diabetes Mellitus), கட்டுப் படுத்தத்தான் முடியுமே தவிர, பூரணமாகக் குணப்படுத்த முடியாது.

0 ப. நாகமணி, திருநெல்வேலி:

• பிளாஸ்டிக் சர்ஜரி என்பது பிளாஸ்டிக்கை உபயோகிக்கிற ஒன்றா? எவற்றை எல்லாம் பிளாஸ்டிக் சர்ஜரி மூலம் சீரமைக்கலாம்? இதனால் அலர்ஜி, பின் விளைவுகள் ஏற்படுமா? அப்படி ஏற்பட்டால் அதை எப்படிப் போக்குவீர்கள்?

உருக்குலைந்த உறுப்புக்களைச் சீராக, அசல் வடிவம் கொடுக்கச் செய்யப்படும் அறுவைச் சிகிச்சையே பிளாஸ்டிக் சர்ஜரி எனப்படுவது. இதற்கும் பிளாஸ்டிக்குக்கும் எந்தவிதச் சம்பந்தமும் இல்லை. உடலில் தீப்பற்றியதால், அல்லது எண்ணெய் கொட்டியதால், பிறப்பிலேயே ஏற்பட்ட குறைகளால், குஷ்டம் போன்ற நோய்களால், சாலை மற்றும் தொழிற்சாலை




## டாக்டர் பதில்கள்:

விபத்துக்களால் ஏற்படும் உருவ மாற்றத்தை பிளாஸ்டிக் சர்ஜரியால் சரிப்படுத்தலாம். இதில் ஒரு பிரிவு காஸ்மெடிக் சர்ஜரி. மார்பகம், இடை, வயிறு, தொடை ஆகிய பாகங்களை அழகுறமாற்றி அமைப்பதுடன் முகத்தின் வனப்பை அதிகரிக்கவும் சுருக்கங்களைக் குறைக்கவும் உதவுகிறது. இந்த ஆபரேஷன்களால் எந்தவிதப் பின் விளைவுகளும் இல்லை.

0 பி. ஸ்ரீதர், மன்னார்குடி — 3:

o ஹெர்னியா என்பது என்ன? அது எப்படி ஏற்படுகிறது? ஆண்களுக்கு மட்டும் தான் இது வருமா? ஆபரேஷன் மூலம்தான் குணப்படுத்த முடியுமா? இதற்குப் பின் சைக்கிள் ஓட்டக் கூடாது என்கிறார்களே, உண்மைதானா? விரைவீக்கம் என்பதும் ஹெர்னியா என்பதும் ஒன்றுதானா?

ஹெர்னியா என்பது உடலுக்குள் இருக்கும் உறுப்புக்கள் (உதாரணமாக, சிறுகுடல்) வயிற்றிலோ, தொடையிலோ உள்ள பலகீனமான இடங்களை, அழுத்தி, துவாரங்கள் வழியே வெளியே நீட்டிக் கொண்டிருப்பதுதான். மலச்சிக்கல், இருமல் போன்ற உள் வயிற்று அழுத்தம் அதிகரிக்கும் உபாதைகளாலும், பளு தூக்குதலாலும் ஹெர்னியா உண்டாகிறது. இதை ஆப்ரேஷன் மூலம்தான் குணப் படுத்த முடியும். இது ஆண், பெண் இருபாலாருக்குமே வரும். ஆபரேஷன் ஆன மூன்று மாதங்களுக்குப் பின் சைக்கிள் ஓட்டலாம். ஒருவித (இங்க்வினல்) ஹெர்னியா விரைவீக்கமாகத் தெரிகிறது. ஹெர்னியாவைத் தவிர, விரை வீக்கத்துக்கு ஹைட்ரோசில், ஆர்க்கைட்டிஸ் போன்ற வேறு காரணங்களும் உண்டு.

தொகுப்பு: எஸ். வி. என்.

# தி.மு.க. அரசைக் கலைக்கப் பிரதமர் தயங்குவது ஏன்?

*** இ. எஸ். லலிதா, குடியாத்தம்.**

**? 'பெண் என்றால் பேயும் இறங்கும்' என்று கூறுவது ஏன்?**

! சில கணவன்மார்கள் மனைவியின் சம்பளத்தைக் குறைத்துச் சொல்லும் போது பேயும் இறங்கும் — புரிகிறது.

*** எஸ். பாலாஜி, சென்னை — 1.**

**? பிரச்சனை, பிரச்சினை, பிரச்னை — எது சரி?**

! இது ஒன்றும் பெரிய பிரச்னை இல்லை.

*** வளர்மதி ஆசைத்தம்பி, தஞ்சாவூர்.**

**? 'அரசாங்கம் ஏற்று நடத்தும் நட்சத்திர ஓட்டல்களுக்கு வரும் விவசாயிகளுக்கு உணவும் தங்குமிடமும் பாதி விலையில் அளிக்கப்படும்' என்று தேவிலால் அறிவித்துள்ளாரே?**

! எத்தனையோ அபத்த அறிக்கைகளுள் இதுவும் ஒன்று. இந்த யோசனை நிறைவேறுவதாகவே வைத்துக் கொள்வோம். அதனால் ஏற்படும் நஷ்டத்தைத் தாங்கப் போவது யார்? அரசு நடத்தும் நட்சத்திர ஓட்டல் என்பதால் வரி செலுத்துவோராகிய மக்கள்தான். அதாவது அந்த விவசாயிகளும் உள்படத்தான். எனவே பாதி விலை சலுகை என்பதெல்லாம் காது குத்தல் சமாசாரமே! இந்த நஷ்டத்தில் ஹோட்டலுக்கு ஏற்படும் சேதமும் உள்ளடங்கும். தவிர அயல்நாட்டவர் வருகைக் குறைவும் அதனால் ஏற்படும் வருவாய் இழப்பும் சேர்ந்து கொள்ளும். கடைசியில் எல்லா

* கலைஞரின் திட்டம்!

* கைதானார்





* ராஜீவ்த் தனம்!



* 'இல்லவே இல்லை!'



நஷ்டமும் நம் தலையில்தான் விடியும்!

*** ச. சரவணன், சென்னை.**

**? தி. மு. க. அரசைக் கலைப்பதில் சந்திரசேகர் தயக்கம் காட்டுவது ஏன்?**

! தான் சொந்தக் காலில் நிற்காத போது, அடுத்தவன் காலை எப்படி வாரி விடுவது என்ற யோசனையாக இருக்கலாம். ஆனால் ஒன்று. பிரதமரைச் சும்மா விட மாட்டார் ஜெ. அதுவும் இப்போது சபாநாயகர் தீர்ப்பால் பிரதமரின் கட்சி பலம் மேலும் குறைந்திருக்கும் போது காங்கிரஸ் ஆதரவு மட்டும் அவருக்குப் போதாது. ஜெ ஆதரவும் தேவை.

*** ஜி. நீலா, மன்னார்குடி.**

**? தி. மு. க. அரசு பதவி நீக்கம் செய்யப்படும் பட்சத்தில் இலங்கை தமிழ்ப் போராளிகளை ஏவித் தமிழகத்தில் ரத்தக் களறியை உருவாக்கக் கலைஞர் திட்டமிட்டிருப்பதாக ஜெயலலிதா கூறியிருப்பது பற்றி?**

! திரைக்கதை வசனத்தில் கூட இடம்பெற முடியாத பொறுப்பற்ற பேச்சு என்பது ஒருபுறமிருக்க, இவர்தானே டிஸ்மிஸ் கோஷம் எழுப்புகிறார். பின்விளைவுகளைச் சந்திக்கத் தயாராக இருக்க வேண்டாமா?

*** கே. ஆர். பவானி, சென்னை — 94.**

**? பட்ஜெட்டில் துண்டு விழுமாறு ஓர் ஆலோசனை உங்களால் தர முடியுமா?**

! நான் என்ன தருவது? அதுதான் அடுத்தடுத்து வரும் அரசுகள் பற்றாக்குறை பட்ஜெட்டாகவே உருவாக்கி உயிரெடுத்து வருகின்றனவே. அடுத்த பட்ஜெட்டுக்கு முன்

அந்தப் பற்றாக்குறை மதிப்பீடும் எகிறிப் போய் எதிர்பார்த்ததைவிட மிக அதிகமாகி, விலைவாசி உயர்வுக்கு வழிவகுத்து வதைக் கிறதே! சென்ற நவம்பர் இறுதி வரை பற்றாக்குறை 13000 கோடியாம்! நிதி அமைச்சர் நிச்சயமாகச் சொல்லி விட்டார். உருப்படுமா நமது பொருளாதாரம்?

* சீனி. கோவிந்தராசன், கோவை.

? 'தேர்தல் தலைமைக் கமிஷனராக சேஷன் நியமனம் அப்பட்டமான ராஜீவ் தனம்' என்கிறேன், சரியா?

! சரிதான். ஆனால் ராஜீவ் மீண்டும் பதவிக்கு வர அப்படிப்பட்ட உதவி தேவை யில்லை. எதிர்க்கட்சிகள் பிளவுபட்டிருப் பதே போதும்!

* கே. ரமேஷ்ராம், செங்குன்றம்.

? சபாநாயகரின் நடவடிக்கை 37 எம்.பிக்கள் விஷயத்தில் எப்படி இருக்க வேண்டும்?

! ஆட்சியில் இருப்பவர் தவிர மற்ற அனைவரும் பாராட்டும் விதமாக அமைந்து விட்டதே! நாமும் ரபி ரேயை வாழ்த்து வோம். அதே சமயம் எம். பி. பதவி இழந்த ஐவர் அமைச்சர்களாக நீடிப்பதைக் கண்டிப்போம். அதற்குப் பிரதமர் கூறும் சமாதானம் (ஆறு மாத அவகாசம் இருப்ப தாக) கொஞ்சமும் சரியில்லை என்பதையும் சொல்லி வைப்போம். அறிஞர்கள் அமைச்சரவையில் சேர்த்துக் கொள்ளப் பட்ட பிறகு ஆறு மாதத்துக்குள் மக்கள் ஆதாவு கோரி எம். பி. ஆகலாம் என்ற வழியைச் சட்டத்தை மீறிப் பதவி இழந்தவர் களுக்குப் பொருத்திப் பார்ப்பது பிரதமர் செய்யும் மாபெரும் அநீதி என்பதை மறவாதிருப்போம்.

* வே. செந்தில்குமார், கொங்கணாபுரம்.

? தார்மீக அரசியல் என்பது என்ன?

! கறுப்புக் கொடி காட்டுவோருக்குச் செருப்படி கொடுப்பதாக நிச்சயம் இருக்க முடியாது. முன்னர் முந்தானை இழுத்தவரா கக் குற்றம் சுமத்தப்பட்டவர், பின்னர் 'இல்லவே இல்லை' என்றார், இப்போது செருப்படி கொடுத்ததாகக் குற்றம் சுமத்தப் படும் அதே நபர் மீண்டும் 'இல்லவே இல்லை' என்கிறார். ஒன்று நிச்சயம்: தார்மீக அரசியலுக்கும் துரைமுருகனுக்கும் ரொம்ப தூரம் என்பது. எனவே தார்மீக அரசியல் என்பது துரைமுருகன் நடந்து



* பாதி விளைவில்...

கொள்ளும் விதத்துக்கு நேர்மாறானது என்று சொல்லலாம்!

* கே. ஆர். மணி, குறிஞ்சிப்பாடி.

? உதயமூர்த்தியைக் கைது செய்தது அறிவார்ந்த செயலா?

! கைது செய்யப்படுவதை எதிர்பார்த்துத் தானே அவர் செயல்பட்டிருக்கிறார்? எனவே அவரைப் பொருத்தமட்டில் அது அறிவார்ந்த செயல்தான். அரசைப் பொருத்தமட்டில் ஓவர் ரியாக்ஷன்.

* என். கந்தசாமி, மதுரை.

? தமது காரின் முன் படுத்து மறியல் செய்த தொண்டர்களை அடித்துப் புரட்டி எடுத்த ஒரிசா முதல்வர் பற்றி?

! துரைமுருகனுக்கு அண்ணன்!

* மேலை பழ. நாகப்பன், சென்னை - 41.

? தமிழக சுற்றுலாத் தலங்களுள் தங்களைக் கவர்ந்தது?

! லேட்டஸ்ட்டாகத் திருவையாறு. ஏனெ னில் இங்கேதான் தியாகையர் பிறந்தார் என்றும் அங்கு பிறந்ததால்தான் அவருக்கு ஆண்டுதோறும் ஆராதனை விழா நடப்பதா கவும் தமிழக சுற்றுலாத் துறை இமாலயத் தவறுடன் விளம்பரம் வெளியிட்டிருக்கிறது.

* ரூ. 20 பரிசு பெறுபவர்:

மேலை. பழ. நாகப்பன்,
7 1|4, பலகை வாராவதி சாலை,
திருவான்மியூர்,
சென்னை – 41.



* தயக்கம் ஏன்?

## நீங்கள் கேட்டவை — தராசு

# இல்லறத்தைத் தகர்த்த பணபயம்!

வெவ்வேறு மதங்களைச் சேர்ந்த மேரியும் விக்ரமும் காதலித்துத் திருமணம் செய்து கொண்டனர்...




மாமியார் வரும் போதெல்லாம் மேரி சண்டை போட்டாள்...




விக்ரம், இந்தப் புகார்களை லட்சியம் செய்வதில்லை...






விக்ரம் இந்தச் சண்டைகளில் தலையிட மாட்டான். தனித் தனியே இருவரும் புகார் செய்வதையும் காதில் போட்டுக் கொள்ள மாட்டான்...
மேரி விலக ஆரம்பித்தாள்...




விக்ரமுக்குக் கோபம் வந்தது!...




**கணவன் மனைவியிடையே இடைவெளி அதிகமாயிற்று. மண நல ஆலோசகரை அணுகினார்கள்.**

டாக்டர் ருத்ரன் கூறினார்:

உங்கள் பிரச்னை ரொம்பச் சுலபமாகத் தீர்க்கப்படக் கூடியது. விக்ரமின் அம்மாவுக்கு, எங்கே பிள்ளை தங்களுக்கு அளிக்கும் பொருளாதார ஆதரவை நிறுத்தி விடுவானோ என்று பயம். இது தீர வேண்டுமானால் நீங்கள் இருவரும் சேர்ந்து 'அவர்களுக்குப் பெரிய அளவில் ஏதேனும் பொருள் உதவி செய்ய வேண்டும். எப்படியிருந்தாலும் விக்ரமின் தங்கைகளுக்குக் கல்யாணம் செய்ய நீங்கள்தான் உதவ வேண்டும். அதனால் இப்போதே ஒரு தொகையை அதற்காக டெபாஸிட் செய்து அவர்களிடம் பத்திரத்தைக் கொடுங்கள். மருமகளினால் தங்கள் பொருளாதார நிலை ஆட்டங்கண்டு விடாது என்று தெரிந்து போகும். மாதா மாதம் அம்மா உங்கள் வீட்டுக்கு வந்து பணம் வாங்கிக் கொண்டு போவதால்தானே தகராறு...? அடுத்த சில மாதங்களுக்கு விக்ரமே பணத்தைக் கொண்டு போய்க் கொடுக்கட்டும். இதனால் வேலை கெட்டுப் போனாலும் நல்லெண்ணம் உண்டாகும். கொஞ்ச காலத்துக்கு மாமியார் – மருமகள் சந்திக்காமல் இருக்கட்டும். தானாகவே வெறுப்பு தணிய வாய்ப்புக் கொடுங்கள். அதே சமயத்தில் மருமகளைப் பற்றி மாமியாரோ அல்லது மாமியாரைப் பற்றி மருமகளோ தனிமையில் குறை கூறுவதை விக்ரம் ஒரு போதும் அனுமதிக்கக் கூடாது. இதற்கு அழுத்தம் திருத்தமாக விக்ரம் தன் எதிர்ப்பைத் தெரிவித்துவிட வேண்டும்.

கணவன் – மனைவியிடையே மீண்டும் நல்லுறவு ஏற்பட, ஒருவரிடம் மற்றவர் என்ன எதிர்பார்க்கிறீர்கள் என்பதை வெளிப்படையாகச் சொல்லிப் பரிமாறிக் கொள்ளுங்கள். விக்ரமிடம் மேரி படிப்பு, பட்டத்தை எதிர்பார்க்கவில்லை. இனிமையான தோழமையைத்தான் எதிர்பார்க்கிறாள். விக்ரமும் மேரியிடம் அதையேதான் எதிர்பார்க்கிறான். கூடவே, தன் அம்மாவின் போக்கைப் பெரிய பிரச்னையாக்கி, விவாதித்து, சோர்வடையாமல் கொஞ்சம் கொஞ்சமாக அவள் நம்பிக்கையைப் பெற முயற்சி செய்யலாமே என்று எதிர்பார்க்கிறான். இந்த எதிர்பார்ப்புகளை மனசுக்குள்ளேயே வைத்திராமல் வெளிப்படையாகப் பேசினால் அவற்றைப் பூர்த்தி செய்யும் முயற்சியில் மூவருமே சேர்ந்து ஈடுபட முடியும்.

பேட்டி: **எஸ். ஆர்.**

# பத்தாயிரம் இட்லி பார்சல்!







மாணவன்: "நியூட்டனின் கண்டுபிடிப்புக்கள் பல அவர் வளர்த்த நாயினால் அழிஞ்சு போச்சாமே! 'விஞ்ஞான உலகுக்கே பேரிழப்பு'ன்னு என் அப்பா சொன்னார், சார்!".

வகுப்பாசிரியர்: "விஞ்ஞானத்துக்கு நஷ்டமாயிருக்கலாம். உங்களுக்கு லாபம் தானே. இல்லாட்டா அதையும் சேர்த்துல்ல நீங்க படிக்கணும்! நானும் உங்களுக்குப் புரிய வைக்க உசிரை விடணும்! நாய்க்கு நன்றி சொல்லு!"

— எஸ். ஏ. பி. பிரபு இமானுவேல், சென்னை — 102.

• • •

தமாஷ் பேர்வழியான என் நண்பர், ஒரு நாள் டீ கடை வாசலில் அமர்ந்திருக்கும் போது, ஒருவர் வேகமாய் அவரை நெருங்கினார். உடனே நண்பர், "ரொம்ப கோபமா இருக்கியா, சூடா ஒரு டீ சாப்பிடு. அப்புறம் பேசலாம்" என்று கூறி டீக்கு ஆர்டர் தந்தார்.

வந்தவரோ, "அதெல்லாம் ஒரு மண்ணும் வேண்டாம்; மூதல்ல எனக்கு பதில் சொல்லு!" என்று ஆத்திரத்துடன் இரைந்தார்.

நண்பர் உடனே, "ரொம்ப சூடா இருக்கே, ஒரு கூல்டிரிங் சாப்பிடு; கூல் ஆயிடுவே" என்றார்.

'கூல் டிரிங்' என்றதும் வந்தவருக்குக் கொஞ்சம் சபலம் தட்ட, "சரி, ஆர்டர் கொடு" என்று சம்மதித்தார்.

உடனே என் நண்பர், கடைக்காரரைப் பார்த்து, "அந்த டீயை ஜில்லுன்னு ஆத்திக் கொடுப்பா" என்றதும் வந்தவர் முகம் போன போக்கு......!

— ஜி. டி. ராஜா, சென்னை — 28.

• • •



"காலம் ரொம்பத்தான் கெட்டுப் போச்சு!"

"என்ன சார் சொல்றீங்க?"

"மெக்கானிக், என் காரைப் பாத்துட்டு, "சார், உங்க பேட்டரிக்குப் புது கார் மாத்தணும்'னு சொல்றான்."

— இராஜ. சண்முகானந்தம், குடியாத்தம்.

• • •

"அறத்தான் வருவதே இன்பம்" என்ற தலைப்பில் கட்டுரை எழுதச் சொல்லியிருந்தார் தமிழ் ஆசிரியர். எழுதிக் கொடுத்திருந்தோம். புரட்டிக் கொண்டே வந்தவர், 'குபீர்' என்று சிரித்தார். நாங்கள் புரியாமல் திகைக்க, "கமலா எந்தத் தலைப்பில் எழுதியிருக்கிறாள் தெரியுமா?" என்று கேட்டு அந்த மாணவியின் நோட்டுப் புத்தகத்தை அனைவரும் காண உயர்த்திப் பிடித்தார். கொட்டை எழுத்துக்களில் தலைப்பு இப்படி காணப்பட்டது:



"அத்தான் வருவதே இன்பம்!" தமிழாசிரியரின் சிரிப்பு எங்களையும் தொற்றிக் கொள்ள, ஒரே கலகல!

— எஸ். யோகலிங்கம், சென்னை — 82.

● ● ●



"என்னது: 'உடல் ஊனமுற்றோர் ஒதுக்கீட்டின்' கீழ் ஆட்சி அமைக்கத் தலைவர் அனுமதி கேட்டாரா, எப்படிங்க?"

"அவருக்கு வலது கரமாக இருந்த ஒருத்தர் கட்சி மாறிட்டாராம்!"

— வீ. மனோகரன், சென்னை — 102.

● ● ●

அலுவலகத்தில் ஒரு பெண் குமாஸ்தா கொஞ்சம் அரட்டை டைப். "என் கணவருக்கு எதையும் செலக்ஷன் பண்ணவே தெரியாது. அவருக்கு பேண்ட், சட்டை கூட நான்தான் எடுப்பேன்" என்றார்.




ஒரு குறும்புக்காரர், "பல வருஷங்களாகவே அவரை எனக்குத் தெரியும். செலக்ஷன் என்று வந்தாலே, அவர் எதிலுமே 'வீக்'தான் என்றதும் பலத்த சிரிப்பு!

— அ. ஷண்முகசுந்தரம், சிட்லபாக்கம்.

● ● ●



"அந்த நடிகைக்கு இந்த ஜன்மத்தில் கல்யாணம் கிடையாதுன்னு எப்படி அவ்வளவு உறுதியாச் சொல்றே?"

"சிறந்த நடிகைன்னு பெயர் வாங்கின பிறகுதான் கல்யாணம்னு பேட்டி கொடுத்திருக்காளே, பார்க்கலையா?"

— எஸ். ஜனார்த்தனன், சென்னை — 8.

● ● ●




ஒரு நாள் காலேஜ் கேண்டீனில் காலை உணவு இட்லி சாப்பிட்ட போது நண்பன் திடீரென, "பத்தாயிரம் இட்லி பார்சல்" என்றான். சர்வர் வியந்து பார்த்த போது, "வீடு கட்ட அஸ்திவாரத்துக்குக் கருங்கல் ஜல்லிக் கல் கிடைக்கவில்லை. அதுதான் கேட்கிறேன்" என்று சீரியஸாகக் கேட்க, எல்லோரும் பயங்கரமாகச் சிரித்து விட, அந்தக் குலுங்கலில் கல் போன்ற இட்டிலி கூட ஜீரணமாகி விட்டது!

— சுரேஷ் குமார், பொள்ளாச்சி.

**சிரிக்க வையுங்கள்;**
**சிங்கப்பூர் செல்லுங்கள்!**






வட்டமேஜை

# அத்துப்படியான சுற்றுலாத் தலங்கள்

● ''சந்திரசேகர்: முரண்பாடுகளின் மொத்த உரு'' தலைப்பைத் தில் சந்திரசேகர் எப்படிப்பட்ட நிலையில் இருக்கிறார் என்பதை, மக்களுக்குத் தெள்ளத் தெளிவாகக் கூறியிருப்பது அருமை.

திருவெண்ணெய் நல்லூர்,
ஆதம். அப்பாஸ்.

● 'மத்தளத்திற்கு இரண்டு பக்கமும் இடி' என்பதைப் போல, ராஜீவைக் கேட்டுச் செயல்பட்டால் பத்திரிகைகளின் பாய்ச்சல்! கேட்காமல் செயல்பட்டால் ராஜீவிடமிருந்து பாய்ச்சல்'! எல்லோரையும் அனுசரித்துக் கொஞ்சம் கொஞ்சமாகத்தான் பிரச்னைகளைத் தீர்ப்பார் சந்திரசேகர். அதற்குள் அவரை 'ஆளும் தகுதி வற்றவர்' என்று கூறிவிட முடியாது.

பூனாம்பாளையம்,
என். ஆர். சுப்பிரமணியன்.

● 'ஒரு கதையின் விலை' — சிறுகதைக்குள் ஒரு சிறுகதை வைத்துச் சிறிதும் குழப்பமில்லாமல் தெளிவாகக் கூறப்பட்டுள்ள விதம் அற்புதம்!

குடியாத்தம், இ. எஸ். லலிதா.

● ''நீங்கள் தமிழகச் சுற்றுலா நிபுணரா?'' என்ற போட்டி வைத்தாலும் வைத்தீர்கள்... பரிசு வாங்கப் போகிறோமோ, இல்லையோ, தமிழ்நாட்டில் எந்தெந்த ஊர் எங்கெங்கு இருக்கிறது என்பது எனக்கு அத்துப்படி போங்க!

வேலூர் — 6,
பொ. பொற்செல்வன்.

● வார்த்தை ஜாலங்களுக்குச் சுற்றுலாத் துறையும் தப்பவில்லை என்பதைப் பட்டியல் போட்டுக் காட்டி விட்டீர்களே!

சிதம்பரம் — 1,
என். ஆர். பாஸ்கரன்.

● விடுமுறைப் பயணச் சலுகையைப் பயன்படுத்தி எங்கு போவது என்று குழம்பியிருந்த நான், பஞ்சணி பற்றிய கட்டுரையைப் படித்ததும் அங்கு குடும்பத்துடன் சென்று பார்க்க முடிவெடுத்து விட்டேன்.''

திருச்சி — 2, என். சம்பத்.

● அட்டகாசமான நாலு பொங்கல் வாழ்த்து அட்டைகள். அதிலும் எங்களூர் மதுரை மாரியம்மன் கோயில் தெப்போற்சவ வண்ணப் படம் எனக்காகவே நீங்கள் அனுப்பியது போல் ஒரு பிரமையை உண்டு பண்ணியது!

மதுரை — 11,
திருமதி. சுகந்தி நாராயண்.

● ஜல்லிக்கட்டு பற்றிய விவாதத்தை, அது நடக்க இருக்கும் தருணத்தில் போட்டுச் சம்பந்தப்பட்டவர்களைச் சிந்திக்க வைத்துள்ளீர்கள்.

சென்னை — 33, வி. எஸ். வாசன்.

● ஜல்லிக்கட்டு என்னதான் வீர விளையாட்டு என்றாலும், அதனால் வரும் ஆபத்தை நினைத்தால், அது ஒரு வீர விளையாட்டு என்று தீர்மானிக்கச் சிரமமாகத்தானிருக்கிறது!

டி. வி. நல்லூர். வி. எஸ். நாதன்.

● கருத்தாழம் மிக்க வகையில் கல்கி வெளியிடும் கார்ட்டூன்கள் மற்ற பத்திரிகைகள் மேற்கோள் காட்டும் வகையில் இருப்பது குறித்து மிகுந்த பெருமை கொள்கிறோம்.

கொளவட்டம்,
கே. ஆர். தேவேந்திரன், குடும்பத்தினர்.

● ''துணிவு'' சிறுகதையல்ல; வசன கவிதை! காதலின் பரிணாமத்தையும், எதிர்காலத்தைப் பற்றிய இளைஞர்களின் சிந்தனையையும், விளக்கியுள்ள விதம் அற்புதம்!

நரிப்பாளையம்,
அ. கிருஷ்ணமூர்த்தி.

● 'லண்டன் அனுபவங்கள் செய்திகளும், நிலவுள்ள படங்களும் லண்டனுக்கே சென்று வந்த உணர்வை ஏற்படுத்தின.

திருக்குவளை,
கவிஞர் வெற்றிப் பேரொளி.

● ஷேக்ஸ்பியருடைய மனைவியின் வீட்டைப் பராமரிக்க இங்கிலாந்து அரசு எடுத்து வரும் முயற்சிகள், பழமையைப் பாதுகாக்க அவர்கள் கொண்டுள்ள அக்கறையைக் காண்பிக்கிறது. இங்கோ பல இடங்கள் பராமரிப்பின்றி அழிந்து கொண்டு வருகின்றன. சுற்றுலா ஆண்டிலாவது அரசு முழு முயற்சி எடுத்துப் பாதுகாக்கத் தொடங்குமா?

புவனகிரி, — 1,
ச. அருட்செல்வன்.

● முருந்திரி முனுசாமிக்குச் சென்னையில் பார்க்க வேண்டிய இடங்களைச் சுற்றிக் காட்டிய விதம், கல்கிக்கே உரிய தனிச் சிறப்பு!

இலால்குடி, எம். இராஜேந்திரன்.

பரதன் அச்சகத்தில் அச்சிடுபவர் வி. முரளி. பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர் வி. வைத்தியநாதன். ஆசிரியர்: கி. ராஜேந்திரன். இணை ஆசிரியர்: சீதா ரவி.
முகவரி: ரேஸ்கோர்ஸ் சாலை, கிண்டி, சென்னை — 600 032. போன்: நிர்வாகக் காரியாலயம்: 431543, 434157; 434190. ஆசிரியர் குழு அலுவலகம்: 434145.
ஆண்டுச் சந்தா — உள்நாடு: ரூ. 130/-; வெளிநாடு: கப்பல் தபால் ரூ. 300/-; விமானத் தபால் ரூ. 700/-.
ஆறு மாதச் சந்தா — உள்நாடு: ரூ. 65/-; வெளிநாடு: கப்பல் தபால் ரூ. 150/-; விமானத் தபால் ரூ. 350/-.

# நினைவிருக்கட்டும், ஊட்டச்சத்துகள் சமச்சீராக உள்ள உணவு இல்லாவிட்டால், உங்கள் குழந்தை எடை அதிகரிப்பதற்குத் தேவையான புரோட்டீனைப் பெறமுடியாது.

## "ஆகவேதான் என் குழந்தைக்கு செரிலாக் தருகிறேன்."

உங்கள் டாக்டரைக் கேளுங்கள். அவர் இரண்டு உண்மைகளை உங்களுக்குத் தெரிவிப்பார். ஒன்று, குழந்தையின் தசை, திசு, ரத்தம் ஆகியவைவற்றைப்பேணி வளர்த்திட புரோட்டீன் உதவுகிறது இரண்டு, சரியான புரோட்டீன்களைப் பெற, ஊட்டச்சத்துகள் சமச்சீராக உள்ள உணவு குழந்தைக்குத் தேவை. ஒவ்வொரு வேளையும் ஒவ்வொரு நாளும்.

வழக்கமான உணவுகள் மூலமாக இதைச் சமாளிப்பது பெரும்பாலான தாய்மார்களுக்கு எளிதல்ல.

இதற்குத் தீர்வு?

செரிலாக் காரணம், செரிலாக்கில் பால் மற்றும் கோதுமை உள்ளன. இவற்றில் புரோட்டீன் மிகுந்து இருக்கிறது. மேலும், செரிலாக்கில் கார்போஹைட்ரேட்கள், விட்டமின்கள், மினரல்கள், கொழுப்பு, இரும்பு மற்றும் கால்ஷியம் சத்துகள் சரியான விகிதத்தில் உள்ளன. நான்கு வயது முதல் குழந்தைக்கு வெறும் பால் உணவு மட்டும் போதாது. ஆகவே அப்போதிலிருந்து, கொடுக்கக்கூடியது, ஊட்டச்சத்துகள் சமச்சீராக உள்ள திட உணவு செரிலாக். இது மிகுந்த சுவை உள்ளதாக இருப்பதால், குழந்தைகள் மிகவும் விரும்புகிறார்கள்.

ஆகவே, ஊட்டச்சத்துகள் சமச்சீராக உள்ள செரிலாக்கின் அனைத்து அனுகூலங்களையும் உங்கள் குழந்தைக்கு அளியுங்கள். குழந்தைக்கு 6 மாதம் ஆனதும் விட்-ஆப்பிள், விட்-ஆரஞ்சு மற்றும் விட்-வெஜிடபிள் ஆகியவற்றின் கூடுதல் அனுகூலத்தையும் அளியுங்கள்.

*பேக்கின் மீதுள்ள விதிமுறைகளைப் பின்பற்றுக.*

---

**இலவசம் செரிலாக் பேபி கேர் புத்தகம்**
எழுதுங்கள்: செரிலாக், போஸ்ட் பேக் நம்பர் -11, புது தில்லி-110 [illegible]

---

நெஸ்லேயின் ஒரு தரமான தயாரிப்பு




உங்கள் குழந்தைக்கு அளியுங்கள் செரிலாக்.